PONDS




## பொன் நகைகள் மின்னிட... சந்தன நறுமணம் கமழ்ந்திட....

இனிய உணர்வுகள் மனதில் மலர்ந்திடும் கணங்கள். உங்கள் மேனியில் பொன் நகைகள் மின்னிட, தூய சந்தனத்தின் நறுமணம் கமழ்ந்திட இதுவரை அனுபவித்தறியா உணர்வுகளால் உள்ளம் பூரிக்கிறது; பெண்மை உங்களிடம் பூரண பொலிவு பெறுகிறது.

அரிய நறுமணம், மதிப்பில் பொன்னைப் போல் உயர்ந்தது.

# பாண்ட்ஸ் சாண்டல் டால்க்

HTA 7023



தளபதி திடமதி பற்றிய இரண்டு துணுக்குகள் எழுதிப் பிரசுரமாவதில் வெற்றி பெற்றுள்ள பழனீஸ்வரிக்குப் பரிசும் இரட்டிப் பாகிறது. அவர் ரூ.50/- பரிசு பெறுகிறார்.

''விலைவாசி உயர்வு பற்றி அரசியல் வாதிக்கு என்ன தெரியும்னு ஜனங்க பேசிக்கிறாங்க, தலைவரே!''

திடமதி: ஏன்யா தெரியாது? எம்.எல்.ஏ., எம்.பி. விலைகளெல்லாம் ஒரேயடியா ஏறிப்போக, ஒவ்வொருத்தனுக்கும் அஞ்சு லட்சம், பத்து லட்சம்னு கொடுத்து வாங்க வேண்டியிருந்த கஷ்டம் எங்களுக்கா தெரி யாது!

டி.பழனீஸ்வரி, மதுரை

# வாழைமரச் சின்னம் சாலச் சிறந்தது!

திடமதி: தலைவரே! நம்ம கட்சிக்கு வாழை மரத்தைச் சின்னமாகக் கேளுங்கள்...

தலைவர்: ஏன்?

திடமதி: வாழையடி வாழையாய் உங்கள் குடும்பத்தைச் சேர்ந்தவர்களே பதவிக்கு வர ஞும்கிறதை உணர்த்தத்தான்!

வி.உமா, சென்னை-92

திடமதி: யோசிச்சுப் பார்த்தா சுயேச்சையாய்ப் போட்டி போடறது தான் நல்லதுன்னு படுது...

நண்பர்: அதெப்படி?

திடமதி: ஜெயிச்சுட்டா, எந்தக்கட்சி மந்திரி சபை அமைச்சாலும் அதுல சேர்ந்துக் கலாமே!

கிங்வி, சென்னை-18

## 13..14



திடமதி: நாம் கூட்டிய இந்த சர்வ கட்சி கூட்டத்துக்குப் பதின்மூன்று தலைவர்கள் வந் திருக்கிறார்கள் என்பது மகிழ்ச்சி அளித்த போதிலும் அவர்கள் பதினாறு கட்சிகளைச் சேர்ந்தவர்கள் என்பதைப் பார்க்கும் போதுதான் தலையைச் சுற்று கிறது...!

எம்.எஸ்.விமலா, மயிலாடுதுறை



## கு. க. ஆபரேஷனுக்குப் பலி!



• ஆனந்தாயி.




ஆனந்தாயி, தம் அக்காள் — அக்காள் கணவரின் ஆதரவில்தான் வாழ்ந்து வந்திருந்தார். அக்காள் வீட்டுக்குச் சற்றுத் தொலைவில் குடிசை. அங்கிருந்தபடியே சாந்து செய்து, குங்குமம் செய்து, சில்லறை விலையில் வளையல் வாங்கி, அவற்றைக் கூடையில் வைத்துக் கொண்டு வியாபாரம் செய்து வந்தார்.

வந்தார், போனார் என்றால்...?

இப்போது அவர் இல்லை!

வறுமையின் காரணமாகக் குடும்பக் கட்டுப்பாடு அறுவை சிகிச்சை செய்து கொண்ட அவர், சிகிச்சையின் பின் விளைவாக உடல் பழுதடைந்து, சீழ்ப் பிடித்து, சிதலமடைந்து மொத்தமாகப் போய்ச் சேர்ந்து விட்டார்!

வறுமையின் காரணமாக அறுவை சிகிச்சை செய்து கொள்வானேன்? அவருக்குத்தான் ஆதரவு காட்ட அக்காள் ராஜாம்பாளும் அக்காள் கணவர் சுப்பிரமணியனும் இருந்தனரே? மேலும் வருமானத்திற்கு வளையல் வியாபாரமும் இருந்ததே!

உண்மைதான். ஆனால் வியாபாரத்தில் என்ன பெரிதாக லாபம் வந்து விடப் போகிறது? அதோடு, ஆயிரம்தான் ஆனலும், அக்கா வீட்டில் இருப்பது, சொந்த வீட்டில் குந்திச் சாப்பிடுவது போல ஆகுமா? கூச்சம்! அக்காள் தன் கணவர், பிள்ளைகளுடன் கஷ்டப்பட்டு ஜீவனம் நடத்திக் கொண்டிருக்கும் போது தானும் ஏன் அவளுக்குப் பாரமாக இருக்க வேண்டும்?

ஆனந்தாயி, தன் பட்டமர வாழ்க்கையில் மேலும் வேதனை அனுபவிக்க வேண்டாம் என்று கருதி அவருடைய இரண்டு மகள்களையும் தம் சொந்தப் பொறுப்பில் சென்னையில் வைத்து வளர்த்து வந்தார் மூத்த அக்காள் ஒருவர். பெரிய பெண் சாந்திக்குத் திருமணமாகி விழுப்புரத்திலேயே (சொந்த ஊர்) நிரந்தர வாசியாகி விட்டார்: விஜயா மட்டும் அவ்வப்போது சென்னையிலிருந்து வந்து தாயைப் பார்த்து விட்டுச் செல்வார்.

விஜயாவுக்கும் திருமணமாயிற்று. தையல் வேலை செய்யும் ஒருவருக்கு அவரை மணமுடித்தார் ஆனந்தாயி — நான்கு மாதங்களுக்கு முன்.

இரண்டு பெரிய பொறுப்புகளையும் முடித்த ஆனந்தாயி, தன் ஒருத்திக்காகத் தன் அக்காள் மேற்கொண்டிருக்கும் செலவுச் சுமையை ஓரளவாவது குறைக்க வேண்டும் என்று தீவிரமாகச் சிந்திக்க ஆரம்பித்தார். தனக்குச் சற்றுக் கூடுதலாக வருமானம் வேண்டும் என்று நினைத்தார்.

அப்போதுதான் கு.க. ஏஜெண்ட் பெண்மணி ஒருத்தி ஆனந்தாயியைச் சந்தித்தார். கு.க. அறுவை சிகிச்சை செய்து கொண்டால் உடனடியாகப் பெரிய தொகை ஒன்று தருவார்கள் என்று ஆசை காட்டினார். அந்த வார்த்தைகளில் மயங்கினார் ஆனந்தாயி.

"அவளுக்கு ஊசி, கத்தி, கபடான்னு ரொம்பப் பயமுங்க. 'டாக்டர்கிட்ட வா,



• விஜயா, ராஜாம்பாள், சாந்தி.



• சுப்பிரமணியம்.



• ராஜாமணி — 'இது சாதாரண விஷயமில்லே'

ளாசி போட்டுக்க'ன்னு ஓட்டமா ஓடியே போயிடுவா. இவ்வளவு ஏங்க, கொஞ்ச வருஷத்துக்கு முன்னலை குடும்பக் கட்டுப்பாடு ஆபரேஷன் பண்ணிக்க இவ ஆஸ்பத்திரிக்குப் போயிருக்கா. கூட்டிக்கிட்டுப் போனவங்க முன்கூட்டியே நூறு ரூபாய் பணத்தை இவகிட்ட குடுத்திருக்காங்க. ஆஸ்பத்திரியிலே கத்தி, கொறடுன்னு பார்த்தாளோ இல்லையோ, அப்படியே திமிறிக்கிட்டு அங்கிருந்து ஓடி வந்துட்டா. அது மட்டுமில்லீங்க. தனக்கு நூறு ரூபா பணம் கொடுத்தவங்க கிட்ட அதுக்கு வட்டி பத்து ரூபா போட்டு, நூத்திப் பத்தா திருப்பிக் கொடுத்துட்டா. அவளைப் போய் — அந்தக் குழந்தை மனசைப் போய் — அநியாயமா கெடுத்து, கட்டாய ஆபரேசன் பண்ணியிருக்காங்க''—ராஜாம்பாள் கண்களில் நீர் மல்கக் கூறினர்.

''ஏங்க, இந்த மாதிரி ஆபரேசன் செய்யணும்னு, கணவன் அனுமதி வேணுமில்லே; அட, அவர்தான் இல்லே, ரொம்பவும் நெருங்கினவங்க — அவளுக்கு அப்போதைக்கு ஆதரவு கொடுக்கறவங்க — அவங்க அனுமதியாவது வாங்க வேணுமா? ஒண்ணுமேயில்லீங்க. ஆபரேசனே விழுப்புரம் பொது மருத்துவ மனையிலே பண்ணிட்டாங்க''—சுப்பிரமணியன் மேலும் விவரங்கள் தந்தார்.

''பண்ணிட்டாங்களா? ஏதோ ஏடாகூடமா ஆயிடுச்சு. இந்த மாதிரி ஆபரேசன் பண்ணிக்கப் போறேன்னு அம்மா முன்னடியே எங்ககிட்டே சொல்லலே. வெட்கப் பட்டாங்க போலிருக்கு. ஆனா, நான் வழக்கம் போல் மெட்ராஸிலேருந்து வந்து பார்க்கறேன். அம்மா உடம்பை நிமிர்த்த முடியாமல் வேதனைப்பட்டுக்கிட்டிருந்தாங்க. இரண்டு கைகளையும் முன்னல் ஊன்றி கால்களில் பலவீனத்தோட, நடமாடக்கூட முடியாமல் தவிச்சுக்கிட்டிருந்தாங்க. அவங்க தொப்புளிலிருந்து நீர் வடிஞ்சது. சாப்பாடு எதுவுமே இறங்கலே; எல்லாமே வாய் வழியா வெளியே வந்துட்டுது. 'என்னம்மா, என்ன ஆச்சு உனக்கு'ன்னு நான் கதறி அழுதபோதுதான் சொன்னங்க. 'கு.க. ஆபரேசன் பண்ணிக்கிட்டேன்'னு. இதைச் சொல்ல வெட்கப்பட்டுக்கிட்டு, நாலு நாளா அக்கா வீட்டுக்குச் சாப்பிடக் கூடப் போகாம, நோவையும் வேதனையையும் தாங்கிக்கிட்டு வீட்டுக்குள்ளேயே அடைஞ்சு கெடந்திருக்காங்க அம்மா. பதறிப் போய்ப் பெரியம்மா ராஜாம்பாகிட்ட வந்து சொன்னேன். உடனே அம்மாவைத் தூக்கிக்கிட்டு



• போஸ்ட் மார்டம் ரிப்போர்ட் கோரி ராஜாமணியின் விண்ணப்பம் — இடது பக்கம் ஓரத்தில் டாக்டர் முராரியின் குறிப்புடன்.

DEPARTMENT OF FORENSIC MEDICINE, JIPMER, PONDICHERRY-605006.

Confidential
Ref.MLC/[illegible] /.88

CERTIFICATE

This is to certify that the post mortem examination on the dead body of the deceased ..[illegible]..................................... has been performed by Dr. ..[illegible]......................................... of JIPMER Hospital on ...[illegible].88.............. The dead body after post mortem examination has been handed over to Shri .......... ..[illegible].......... P.C.No..[illegible]....... of ..Villupuram West ................. Police Station on ..[illegible].88......... at ..[illegible] p.m. ................................

Date: [illegible].88
Place: Pondicherry

Doctor's Signature
Name and Designation: Dr..[illegible]

(This Certificate is issued to the relatives for transportation of the above stated dead body, for its cremation or for its burial only)

• ஜிப்மர் மருத்துவ மனையில் வழங்கிய இறப்புச் சான்றிதழ்.

விழுப்புரம் பெரிய ஆஸ்பத்திரிக்குப் போனோம்''—விம்மல் வெடிக்கச் சொன்னார் விஜயா.

அங்கே, ஆனந்தாயிக்கு கு.க. அறுவை (லாபரோஸ்கோபி) சிகிச்சை செய்த லேடி டாக்டர் பிருந்தா, நோயாளிக்கு உடம்பு ரொம்பவும் கவலைக்கிடமாகி விட்டதை அறிந்தார். உடனே ஆம்புலன்ஸுக்கு ஏற்பாடு செய்து, இரண்டு கம்பவுண்டர்களையும், ஆனந்தாயி, மற்றும் அவருடைய உறவினர்களுடன் அனுப்பி வைத்தார், பாண்டிச்சேரிக்கு.

பாண்டிச்சேரி பொது மருத்துவ மனையில் உள்ள ஒரு டாக்டருக்குக் கடிதம் எழுதிக் கொடுத்திருந்தார் டாக்டர் பிருந்தா. அந்தக் கடிதத்தில் என்ன எழுதப்பட்டிருந்ததோ!

ஆனால், பாண்டி பொது மருத்துவமனையில் அந்த டாக்டர் இல்லை. உடனே கம்பவுண்டர் ஒருவருடைய யோசனையின் பேரில் ஆனந்தாயியை ஜிப்மர் மருத்துவமனைக்குக் கொண்டு சென்றார்கள். அங்கு சுமார் ஒன்பது டாக்டர்கள், தங்களது உதவியாளர்களுடன் ஆனந்தாயியின் உயிரை மீட்கப் போராடினார்கள். டாக்டர் அடுல் முராரியின் தலைமையில் அந்த மருத்துவக் குழு தீவிரமாக முயன்றும் ஆனந்தாயியைக் காப்பாற்ற முடியவில்லை.

ஆனந்தாயி இறந்து விட்டார். அறுவைச் சிகிச்சை செய்த இடத்தில் சீழ் கட்டி, அது உள்ளுர உடம்பின் முக்கிய அவயவங்களைப் பாதித்து, அவருடைய உயிரையும் பறித்து விட்டது.

இந்தச் சம்பவங்களின் போது உடனிருந்து தேவையான உதவிகளைச் செய்தவர், ஆனந்தாயியின் அக்காள் ராஜாம்பாளின் மகன் ராஜாமணி. தன் சித்தியின் மரணத்தைச் சாதாரணமாக எடுத்துக் கொண்டு ஒதுக்கி விட முடியவில்லை ராஜாமணியால். கிட்டத்தட்ட ஒரு கொலைக்குச் சமமான முறையில் அவர் உயிர் பறிக்கப்பட்டிருக்கிறது என்று அவர் கருதினார். இதற்குக் காரணமானவர்களை அப்படியே விட்டு விடுவதா?

ஜிப்மரில் ஆனந்தாயியின் உடலை எடுத்துச் செல்லும்படி கூறினார்கள். ராஜாமணி, 'இறப்புச் சான்றிதழ்' கேட்டார். இறப்புச் சான்றிதழ் தரவேண்டுமானால் இதனைப் போலீஸ் கேஸாகக் கருதி, அதையொட்டியே அச்சான்றிதழைத் தரவேண்டும் என்று அறிவித்த டாக்டர் முராரி, போலீஸில் கேஸைப் பதிவு செய்தார். அதன் அடிப்படையில் 'இறப்புச் சான்றிதழ்' கொடுத்தார்.

ஆனால் ராஜாமணி விடுவதாக இல்லை. ''பாடியை நான் இப்படியே தூக்கிக்கிட்டுப் போக முடியாது, டாக்டர். போலீஸ் கேஸாகிட்டதால போஸ்ட் மார்ட்டம் செய்து அந்தச் சான்றிதழையும் கொடுத்திங்கன்னா, அதையும் வாங்கிட்டுப் போயிடறேன்'' என்றார்.

பொது மருத்துவ மனைகள்: மனித உயிருக்கு மதிப்பில்லை!


• முனுசாமி.

• ஆனந்தாயியின் குடும்பத்தினரைச் சந்தித்துக் கொண்டிருந்த போது வீட்டிற்குள்ளிருந்து முனகல் சத்தம் கேட்டது. முனகியவர் ஆனந்தாயியின் அண்ணன், முனுசாமி. முந்தின நாள் மாலை சாலையோரமாக நின்றிருக்க அவரை ஒரு ஸ்கூட்டர் முட்டி மோதி விட்டது. உதவிக்கு ஒரு போலீஸ்காரரும் வந்தார் என்றாலும், போலீஸ் ஸ்டேஷனில் வழக்கு ஒன்றும் பதிவு செய்யாமல் நேராக விழுப்புரம் பொது மருத்துவ மனைக்கு அழைத்துச் சென்றார். அங்கே மருத்துவர்களோ சர்வ அலட்சியமாக ஏதோ மருந்தை அவர் கையில் தடவி, பாண்டேஜ் போட்டுச் சுற்றி விட்டார்கள். அதற்கு முன் எக்ஸ்—ரே எடுத்தார்கள் என்றாலும், அந்தப் படத்தை அவர்கள் முனுசாமியிடம் கொடுக்கவில்லை. 'ஆட்டுக்குப் போ; சரியாயிடும்' என்று கூறியதோடு வெள்ளைக் கலர் மாத்திரைகள் பத்துப் பதினைந்தைப் பொட்டலமாக மடித்துக் கொடுத்திருக்கிறார்கள். விபத்து நடந்த அன்று இரவும், மறுநாளும் வலியால் மிகவும் துடித்துப் போய் விட்டார் முனுசாமி. மருத்துவமனை குறிப்புச் சீட்டில் அவருக்கு வலது மணிக்கட்டில் எலும்பு முறிவு இருப்பதாகவும் குறிப்பிட்டிருக்கிறார்கள். கட்டு சரியாகப் போடப்படாததாலும் முறையான மருந்துகள் தரப்படாததாலும் அவருக்கு வலி, வேதனை குறையாததோடு வலது கையில் வீக்கமும் அதிகரித்திருக்கிறது.

''ஏன்டா போயும் போயும் பொது மருத்துவ மனைக்குப் போனே? பிரைவேட் டாக்டர்கிட்டே

டாக்டர், போஸ்ட் மார்ட்டம் செய்வதற்கான ஏற்பாடுகளைச் செய்தார். ஆனால் போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட் போலீஸ் மூலமாகத்தான் ராஜாமணிக்குத் தரப்படும் என்றும், இந்த வழக்கைப் பதிவு செய்து கொண்ட விழுப்புரம் (மேற்கு) போலீஸ் நிலையத்திலிருந்து பெற்றுக் கொள்ளலாம் என்றும் கூறினார்.

குறிப்பிட்ட நாட்களுக்குப் பிறகு போலீஸ் நிலையத்திற்குச் சென்று விசாரித்த போது 'ரிப்போர்ட்' எதுவும் வரவில்லை என்று அவர்கள் கையை விரித்து விட்டார்கள். ராஜாமணி மீண்டும் ஜிப்மர் போனார்.

அங்கு போய், தனக்குப் போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட் வேண்டும் என்று உரிய அதிகாரிக்கு மனு எழுதினார். விழுப்புரம் காவல் நிலையத்தார் அனுமதித்தால்தான் போஸ்ட் மார்டம் ரிப்போர்டைத் தர முடியும் எனக் கூறிய டாக்டர் முராரி, அந்த மனுவின் இடது பக்கத்தில், சம்பந்தப்பட்ட காவல் நிலையத்திலிருந்து 'நோ—அப்ஜெக்ஷன்' சான்றிதழ் பெறுக என்று குறிப்பு எழுதிக் கொடுத்தார்.

போயிருக்கக் கூடாது!" என்று நண்பர்கள் முனுசாமியை நொந்து கொள்கிறார்கள்.

- விழுப்புரம் அரசினர் பொது மருத்துவமனை பிற எல்லா அரசினர் பொது மருத்துவமனைகளைப் போலத்தான். அலட்சியம், திமிர், வெறுத்து ஒதுக்குதல், திட்டல், நுழைவாசலிலிருந்தே துவங்கும் லஞ்ச லாவண்யம் என்று எல்லா தற்கால நாகரிகங்களையும் கொண்டே விளங்குகிறது. மனித உயிர் அங்கே ஒரு பொருட்டல்ல. பணம். அதுதான் அங்கே வலிமை வாய்ந்தது!

- ஆனந்தாயி கேஸ் மட்டுமல்ல; இதற்கு முன்னால் சுமார் ஐந்து கேஸ்களாவது இதே விழுப்புரம் அரசினர் பொது மருத்துவமனையிலிருந்து ஜிப்மருக்குப் போய்த் துக்கம் தந்திருக்கின்றன என்றும் சொன்னார்கள்.

- விழுப்புரத்தில் லாட்டரிச் சீட்டு விற்பனையாளர், பேட்டியின் போது வந்தார். அவருடைய மகனை நாய் கடித்து, முகத்தில் ஏகப்பட்ட காயம். வி. அ. பொ. ம. மனை வழக்கம் போல அலட்சியம் காட்டியிருக்கிறது. "நாய்க்கடி ஊசி மருந்தெல்லாம் இல்லே, போ, போ" என்ற விரட்டல், லொள்ளல். அந்த ஏழை லாட்டரி சீட்டு விற்பனையாளர் ரொம்பவும் சிரமப்பட்டுச் செலவு செய்து தனியார் டாக்டரிடம் தம் குழந்தைக்கு சிகிச்சை செய்து கொண்டார்.

- 'GENERAL HOSPITAL' என்ற ஆங்கிலப் பதத்தை, 'பொது மருத்துவமனை' என்று தமிழாக்கம் செய்திருப்பதால் ஓர் அலட்சிய மனப்போக்கு உருவாகியிருக்குமோ என்று எண்ணத் தோன்றுகிறது. ராணுவத்தில் GENERAL என்றால் 'தலைமை' என்று பொருள். அதே போல் 'தலைமை மருத்துவமனை' என்று தமிழாக்கம் செய்யப்பட்டால், அதில் வேலை செய்பவர்கள் தாம் 'தலைமை மருத்துவ மனை'யில் பணியாற்றும் 'பெருமை'யில், ஈடுபாட்டுடன் தம் பணியில் செயல்படுவார்கள் என்று தோன்றுகிறது. அதோடு, அரசுச் செலவில் எல்லா வசதிகளையும் கொண்டு இயங்க வேண்டிய மருத்துவமனை, 'தலைமை மருத்துவ மனை'யாகத்தானே அழைக்கப்பட வேண்டும்?

ஆரம்பத்தில் ரிப்போர்டே வரவில்லை எனச் சாதித்த காவல் நிலையத்தார் டாக்டர் முராரியின் குறிப்பைப் பார்த்த பிறகும் விரல்' அசைக்கவில்லை.

இப்போது ராஜாமணி வக்கீலின் உதவியை நாடி நீதி மன்றத்திலேயே நியாயம் கேட்கலாமா என்று யோசித்து வருகிறார்.

வழக்கு, தண்டனை எல்லாம் இருக்கட்டும். போன உயிருக்கு யார் பதில் சொல்லப் போகிறார்கள்? டாக்டர் பிருந்தாவா? அல்லது அவர் சார்பில் விழுப்புரம் பொது மருத்துவமனையா?

"ஆனந்தாயியின் புகைப்படம் இருக்குமா?" என்று கேட்ட போது

"ஒரே ஒரு படம்தான் சார் இருக்கு" என்று கொண்டு வந்தார் சுப்பிரமணியன்.

"இவங்களுக்குச் சிறு தொழில் ஊக்கத் திட்டத்திலே வங்கிக் கடன் தர்றதாகச் சொன்னாங்க. அப்ப எடுத்த படங்க இது." என்று ராஜாம்பாள் சொன்னார்.

அப்ப அவங்களுக்கு என்ன வயசு...?"

"சுமார் அம்பது இருந்திருக்கும்."

"அம்பதா? முப்பத்தஞ்சுன்னு பேப்பர்ல போட்டிருந்தாங்களே?"

"அது யாரு கொடுத்தாங்களோ. அவங்க வயசு அம்பது தாராளமா இருக்கும்" என்ற ராஜாம்பாள் இன்னொரு வெடிகுண்டையும் தூக்கிப் போட்டார். "ஆனந்தாயிக்கு மாசாந்திரத் தொந்தரவு நின்னு போயி ரெண்டு வருஷம் ஆகுதுங்க!"

... அப்படியென்றால் —

செய்யவே வேண்டாத ஓர் அறுவை சிகிச்சை அது! கணவனைப் பிரிந்து வாழ்கிற, வீட்டு விலக்கும் நின்று போன ஒரு பெண்ணுக்குக் கு.க. சிகிச்சை!

நிச்சயம் போஸ்ட் மார்ட்டம் அறிக்கையில் இவ்வுண்மை வெளிவரும்! ஆனால் அந்த உண்மையை மறைக்க காவல் துறையுமல்லவா அரும்பாடுபடுவதாகத் தோன்றுகிறது!

கு.க. திட்டம் ஆஸ்பத்திரியில் கணக்கைக் கூட்டிக் காட்டும் வெறும் புள்ளி விவர அறிக்கையல்ல; அது சமுதாயத் தொண்டு. அரசு ஊழியர்களுக்குக் கு.க.வுக்கு ஆள் பிடிக்கும் இலக்கை நிர்ணயித்து அவர்களை விரட்டுவதால் என்னென்ன விபரீதங்கள் விளைகின்றன! தகுதியற்றவர்களுக்கும் தேவையற்றவர்களுக்கும் கு. க. அறுவை சிகிச்சை செய்து, சாதனைப் பட்டியலை உருவாக்கிக் கொண்டு, மத்திய அரசிடம் விருதும் பாராட்டும் பெற்று அதைப் பறைசாற்றிக் கொள்வது எவ்வளவு பெரிய அநியாயம், ஏமாற்று வித்தை!

போதாக் குறைக்கு லாபரோஸ்கோபி முறைதான் கு.க. அறுவைச் சிகிச்சைகளுள் மிக எளிமையானது; தொந்தரவு அற்றது என்று ஏராளமாக விளம்பரம் வேறு செய்யப்படுகிறது. அந்த எளிய அறுவை சிகிச்சையையே சரியாகச் செய்யாததாலோ அல்லது அலட்சியமாகச் செய்ததாலோ ஓர் அப்பாவிப் பெண்மணி பலியாகியிருக்கிறார். அரசு மருத்துவமனைகளின் அவல நிலைக்கு மற்றும் ஒரு சான்றுதான் ஆனந்தாயியின் மரணம் என்பதோடு, நம் நாட்டு எளிய மக்களிடையே நிலவும் அறியாமையும் வறுமையும் எவ்வளவு அபாயகரமானவை என்பதற்கும் ஓர் எடுத்துக்காட்டு.

கட்டுரை, புகைப்படங்கள்:

**பிரபு சங்கர்**



# முப்பது பக்கங்களில் சில மர்மங்கள்!

மகாத்மா காந்தியின் இறுதிச் சடங்குகளின் போது மவுண்ட்பாட்டன் தம்பதி யுடன் ஆஸாத்.



"இந்தியா விடுதலை பெறுகிறது" என்று ஒரு புத்தகம் எழுதினார் மௌலானா அபுல் கலாம் ஆஸாத். எழுதியவர், ஒரு வேலை செய்தார். "இந்த நூலின் கடைசி முப்பது பக்கங்களை முப்பது ஆண்டுகள் சென்றுதான் வெளியிட வேண்டும்" என்று ஒரு நிபந்தனை விதித்து விட்டுப் போய் விட்டார்!

அன்று முதல் இன்று வரை, 'அந்த முப்பது பக்கங்களில் என்ன இருக்கிறது?' என்று அறிய சரித்திரம் – அரசியல் ஆகியவற்றில் ஈடுபாடு உள்ளவர்களுக்கு ஏக ஆவல், குறுகுறுப்பு.

அதனை அதிகரிக்கச் செய்தது, பிரசுரமான மௌலானாவின் மற்ற பக்கங்கள். அதில் இந்தியா சுதந்திரம் பெற்ற இறுதிகட்ட வரலாறும் அதன் பின்னர் நடந்த சில விஷயங்களும் அவற்றில் தலைவர்கள் பலரது பங்கும் விவரிக்கப்பட்டுள்ளன. புத்தகம் பிரசுரமாகி ஒரு வழியாக முப்பதாண்டுகள் ஓடிச் சென்று விட்டன. தடை நீங்கியது; 'அந்த மர்மமான முப்பது பக்கங்களில் என்ன இருக்கிறது, பார்த்து விடலாம்' என்று நினைத்தவர்களுக்குப் பெரிய ஏமாற்றம்!

ஆஸாத் குடும்பத்தினர் கல்கத்தா நீதிமன்றத்தில் தடை வாங்கி, நூலைப் பிரகரித்த, ஓரியண்ட் லாங்மன்ஸ்இன் கையைக் கட்டிப் போட்டு விட்டனர். கடைசி முப்பது பக்கங்களை வெளியிட முடியவில்லை. இதனால் சாதகம் என்று ஆஸாத் குடும்பத்தினர் நினைத்தால் அது தவறு. காரணம் அந்த முப்பது பக்கங்களின் சாராம்சம் என்ன என்பது பற்றி 'நம்பகமான' ஊகங்கள் வெளியாகின்றன. அதன் அடிப்படையில் பார்த்தால், இரண்டாவது முறையாகவும் ராஜேந்திர பிரசாதையே குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுப்பதில் நேருவுடன் ஆஸாதுக்கு மனத்தாங்கல் இருந்தது என்று தெரிய வருகிறது.

1957ல் குடியரசுத் தலைவராக ஒரு தென்னிந்தியர்தான் வர வேண்டும் என்ற அபிப்பிராயத்தைச் சில பத்திரிகைகள் வெளியிட்டன. நேருவும் மனத்தில் டாக்டர் ராதாகிருஷ்ணனைத்தான் நினைத்துக் கொண்டிருந்தார் என்ற பேச்சு அரசியல் வட்டாரங்களில் அடிபட்டது. ராதாகிருஷ்ணனுக்கும் உதவி ஜனாதிபதியாக நீடிப்பதில் விருப்பம் இருக்கவில்லை. ராஜேந்திர பிரசாத், தமக்கு அபிப்பிராயம் எதுவும் இல்லை என்றும், கட்சியின் விருப்பப்படி செயல்படப் போவதாகவும் நேருவிடம் சொல்லி விட்டார்! அவர் கட்சி என்று குறிப்பிட்டது நேருவையும், ஆஸாதையும்தான். ஆஸாத், ராஜேன் பாபுவுடன் மொகல் கார்டனில் 'வாக்கிங்' போய்க் கொண்டே, அவர் மறுபடி ஜனாதிபதியாக நீடிக்கச் சம்மதத்தைப் பெற்று விட்டார்! இதை ஹிந்துஸ்தான் டைம்ஸ் பத்திரிகையில் துர்காதாஸ் தமது 'பொலிடிகல் டயரி' என்ற பகுதியில் எழுதினாரோ இல்லையோ, தூக்கிவாரிப் போட்டது போல ஆகி விட்டது ராதா கிருஷ்ணனைக் குடியரசுத் தலைவராக்க விரும்பிய பிரதமர் நேருவுக்கு.

நேருவும் ஆஸாதும் ஒருவரிடம் ஒருவர் மதிப்பு கொண்டிருந்த போதிலும் கருத்து வேறுபாடுகளுக்கு உட்பட்ட எத்தனையோ விஷயங்களில் இதுவும் ஒன்று.

'ஆஸாத் தனிப்பட்டவர்களின் நிலைமையை மனத்தில் வைத்துக் கொண்டு பிரச்னைகளை அணுகுகிறார்; சரித்திர நிர்ப்பந்தங்களை அனுசரித்து முடிவெடுப்பதில்லை' என்பது நேருவின் கருத்து. முஸ்லிம்கள் ஜின்னாவின் தலைமையை ஏற்கவும் அவர் பெரிய தலைவராக வளர்ந்து விடவும் நேருவின் சில தவறுகளே காரணமாக அமைந்தன என்பது ஆஸாதின் கருத்து. மேலும் நேரு, பட்டேலுக்கு முழு ஒத்துழைப்பும் தராமல் போய் விட்டதில், ஆஸாதுக்கு வருத்தம் உண்டாயிற்று. 'பிரதமர் பதவிக்கு நேருவை விட, பட்டேல்தான் தகுதியானவர்; பட்டேல் பிரதமராயிருந்திருந்தால் நாடு முன்னேறியிருக்கும்' என்பதும், ஆஸாதின் எண்ணமாயிருந்தது. 'நேருவின் கொள்கைகள் நிர்வாகத்தின் ஸ்திரத் தன்மையை வலுவிழக்கச் செய்தது மட்டுமல்ல, அவரது பொருளாதாரக் கொள்கைகள் மக்களின் வாழ்க்கை நிலையை உயர்த்த உதவவில்லை' என்பன ஆஸாதின் தீர்மானமான முடிவுகள்.

முப்பது பக்கங்களும் சீல் வைக்கப்பட்டுத் தேசிய ஆவணக் காப்பகத்தில் இருக்கின்றன!

— சித்தார்த்



சீக்கிய பயங்கரவாதிகள்
பூடாசிங்
சிதம்பரம்
அரசியல் தீர்வு
பாம்பு சீறிப் பாய்ந்து கொத்திப் பிடுங்கப் போகுது!...
எதிர்க் கட்சிகள்
பெட்ரோல், நெருப்பு தேவை இல்லே. நீங்க மகுடி சரியா ஊதினா போதும்!




நானே முதல்வர்!
ராஜீவ் அலட்சியம்
இலங்கைப் பிரச்னையால் பழுது
ஜானகிக்குச் சாதகமாகக் கோர்ட் தீர்ப்பு




அமைதிப் படை




விடுதலைப் புலிகள்
விடுதலைப் புலிகளுடன் இலங்கை அரசு ரகசிய ஒப்பந்தம்? — செய்தி



# கல்கி

1988 ஏப்ரல் 3
மலர் 46 இதழ் 36
பிரபவ பங்குனி 21



# இதோ, நல்ல சேதி!

'எங்கெங்கு என்னென்ன தவறுகள் நடக்கின்றனவோ, அவற்றை மட்டும் சொல்லிக் கொண்டிருந்தால் போதாது; பத்திரிகைகள் நல்ல செய்திகளையும் கொடுக்க வேண்டும்' என்று குடியரசுத் தலைவர் ஆர். வி. மலையாள மனோரமா நூற்றாண்டு விழா மேடையில் கேட்டுக் கொண்டிருக்கிறார்.

சென்னைக்கு வந்திருந்த போது ஆர். வி. செய்துள்ள ஒருகாரியமே நல்ல சேதி தான். அதாவது, தமக்கு விழா மேடைகளில் தரப்பட்ட விலையுயர்ந்த பரிசுகள், போர்த்தப்பட்ட சால்வைகள் ஆகியவற்றை, அவற்றை வழங்கியவர்களிடமே திருப்பித் தந்து, 'இவற்றை நல்லவிதமாகப் பயன்படுத்துங்கள்; சால்வைகளை ஏழைக் குழந்தைகளுக்கு ஆடை தைத்துக் கொடுங்கள்; மற்ற பொருள்களின் மதிப்புக்கு ஏற்ப நற்பணிகளை நிறைவேற்றுங்கள்' என்று கூறி விட்டுப் போய் விட்டார்.

பொது வாழ்வில் ஈடுபட்டிருப்பவர்கள் விலையுயர்ந்த பரிசுகளைப் பெற்றுக் கொள்ளக் கூடாது என்று கூறியதுடன் அதன்படி நடந்தும் காட்டியிருக்கிறார் ஆர். வி. இதைவிட நல்ல சேதி இருக்க முடியுமா என்றால், இருக்கிறது! அதுவும் ஆர். வியின் சென்னைப் பேச்சிலேயே இடம் பெற்றிருக்கிறது!

'நாட்டின் பொருளாதார முன்னேற்றத்துக்கு ஒரே வழி தொழில் மயமாவது தான்' என்று கூறியிருக்கிறார் ஆர். வி. 'கிராமப் புறங்களில் விவசாயத்தை மட்டுமே நம்பி வாழும் மக்களில் ஐம்பது சதவீதத்தினராவது தொழிலை நம்பி வாழ்கிறவர் களாக மாற வேண்டும்' என்று பேசியிருக்கிறார். தொழிலைத் தேடி அவர்கள் பட்டணங்களுக்கு வந்து விடாமல், கிராமப்புறங்களிலேயே, அல்லது கிராமங்களை யொட்டியுள்ள சிறு நகர்ப் புறங்களில் தொழில்கள் மலர அடிப்படை வசதிகளை அரசு செய்தளித்தால் எவ்வளவோ நன்றாயிருக்கும். இதைத்தான் நாட்டு நலனில் அக்கறை கொண்ட எத்தனையோ அறிஞர்கள் எவ்வளவோ காலமாகச் சொல்லி வருகிறார்கள். இப்போது ஆர்.வி.யே கூறியிருக்கிறார். மத்திய, மாநில அரசுகள் அசைந்து கொடுக்குமா பார்ப்போம்!

ஆர்.வி. வெளியிட்ட நற்செய்திகளுக்கு முன்னதாக மாநில ஆளுனர் அலெக் ஸாண்டர் இருவருந்தத்தக்க செய்திகளை வெளியிட்டாலும், அவற்றையும் ஒரு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்துமாயின் சுப செய்திகளாகவே ஏற்கலாம். 'வேலை யில்லாமல் திண்டாடும் மக்களை அதிக பட்சமாகக் கொண்டிருக்கும் மூன்று மாநிலங்களில் தமிழகம் ஒன்று' எனவும், 'தென் மாநிலங்களில் வறுமைக் கோட்டுக்குக் கீழ் வாழும் மக்களை அதிக பட்சமாகக் கொண்டிருப்பதில் தமிழகம் கடைசியாக விளங்கி அந்த அளவுக்குப் 'பெருமை'யுறுகிறது' எனவும் பேசியிருக் கிறார் அலெக்ஸாண்டர். இந்த நிலைமைக்குக் காரணமானவர்களிடமே மீண்டும் தமிழக மக்கள் ஆட்சியை ஒப்படைக்கப் போகிறார்களா அல்லது விழித்துக் கொண்டு ஒரு மாறுதலை உருவாக்கப் போகிறார்களா என்பது தேர்தலையொட்டிய நல்ல செய்தியாகவோ கெட்ட செய்தியாகவோ இருக்கும்.

தேசிய அபிவிருத்தி கௌன்சில் கூட்டத்தில் கலந்து கொண்ட அலெக்ஸாண்டர், தமிழக நலனைக் கருத்தில் கொண்டு, திட்டங்களுக்கு அங்கீகாரம் வழங்குவதில் மத்திய அரசு செய்கிற காலதாமதத்தை வன்மையாகச் சாடியதும் நல்ல சேதிதான்.

எல்லாவற்றுக்கும் மேலாக, 'பஞ்சாபில் எமெர்ஜென்ஸி அறிவிக்க வகை செய்யும் சாசனத் திருத்தத்துக்குக் குடியரசுத் தலைவர் ஆர்.வி. அங்கீகாரம் அளிக்கக் கூடாது' என்று மது தண்டவதே கோரியுள்ளது ரொம்ப ரொம்ப நல்ல செய்தி. இந்தக் கோரிக்கைக்கு ஆதரவாக தண்டவதே, ஆர்.வி. யின் ஒரு பேச்சையே மேற்கோள் காட்டியிருக்கிறார்! ஜனதா ஆட்சியில் எமெர்ஜென்ஸி விதிகளை ரத்து செய்யக் கொண்டு வரப்பட்ட 45வது திருத்தத்துக்கு ஆதரவு தெரிவித்து அன்று எதிர்க்கட்சியில் இருந்த ஆர்.வி. பேசிய பேச்சு அது. தண்டவதேயின் இன்றைய கோரிக்கையை ஏற்று, ஆர்.வி., இப்போதைய 59வது திருத்தத்துக்கு அங்கீகாரம் அளிக்க மறுத்தால் அதைவிட நல்ல சேதி வேறு என்ன இருக்க முடியும்?

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# N. S.



## N.S.K.
### சிட்பண்ட்ஸ் (பி) லிமிடெட்

## தமிழ்ப் புத்தாண்டு விழா – 13.4.1988

தங்களின் ஒளிமயமான நல்வாழ்விற்கு N.S.K. குரூப் கம்பெனிகள் வழங்கும் திட்டங்களில் சேர்ந்து இலவச பரிசுகளுடன் தமிழ்ப்புத்தாண்டை கோலாகலமாக துவங்குங்கள்

### குரூப்புகள்

| | |
|---|---|
| 250 x 20 | 5000 |
| 125 x 40 | 5000 |
| 500 x 20 | 10,000 |
| 250 x 40 | 10,000 |
| 1000 x 25 | 25,000 |
| 500 x 50 | 25,000 |

| | |
|---|---|
| 1250 x 40 | 50,000 |
| 2000 x 50 | 1,00,000 |
| 100 x 100 | 10,000 |
| 250 x 100 | 25,000 |
| 500 x 100 | 50,000 |
| 1000 x 100 | 1,00,000 |

### இலவச பரிசுகள் (1.4.88 முதல் 30.4.88 வரை)

| சீட்டின் மதிப்பு | சீட்டின் மதிப்பு | இலவச பரிசு |
|---|---|---|
| ரூ. 5,000 | 100 x 100 = 10,000 | எவர்சில்வர் கிண்ணம் |
| ரூ. 10,000 | 250 x 100 = 25,000 | எவர்சில்வர் குடம் மூடியுடன் |
| ரூ. 25,000 | 500 x 100 = 50,000 | வெள்ளி விளக்கு (சிறியது) (அ) எவர்சில்வர் குடம் |
| ரூ. 50,000 | 100 x 100 = 1,00,000 | வெள்ளி விளக்கு |
| ரூ. 1,00,000 | — | குவார்ட்ஸ் சுவர்க்கடிகாரம் |

**விசேஷ சலுகை:**

* இலவச பரிசுகள் புதிதாகச் சேரும் அங்கத்தினர்களுக்கும், புது அங்கத்தினர்களை அறிமுகப்படுத்தும் N.S.K.வின் பழைய அங்கத்தினர்களுக்கும் வழங்கப்படும்.
* ஒரே குரூப்பில் 10 அங்கத்தினர்களை சேர்ப்பவர்களுக்கு 3வது மாதமே சீட்டுப் பணம் முன்பணமாக அளிக்கப்படும்.
* சீட்டுப்பணம் 20 நாட்களுக்குள் பட்டுவாடா செய்யப்படும்.
* ரூ. 50000 சீட்டு வரை சம்பள சான்றிதழ் பேரில் சீட்டுப்பணம் வழங்கப்படும்.

போனஸ்: மாதம் தவறாமல் ஏலத் தேதிக்குள் பணம் செலுத்துவோருக்கு சீட்டின் முடிவில் கட்டிய தொகையில் 1% போனஸாக வழங்கப்படும்.

**N.S.K.** சிட்பண்ட்ஸ் (பி) லிமிடெ[illegible]
38-B, பர்கிட் சாலை (2வது மாடி), தி. நகர், சென்னை-600 017
தொலைபேசி எண்: 442950 445252

*13.4.88 அன்று அனைவரையும் அன்புடன் அழைக்கிறோம்*



### ஒரே ஒரு கிராமத்திலே

**வ**ருஷா வருஷம் வெள்ளத்தால் பாதிக்கப்பட்டு அவதியுறும் தமிழ்நாட்டுக் கிராமம்... இந்தக் கிராமத்துக்கும் இங்கு வாழும் எளிய மக்களுக்கும் விமோசனம் அளிக்கச் சில கோடிகள் நிதியுடன் ஒரு ஸ்பெஷல் ஆபீசரை மத்திய அரசு மாநில அரசுடன் கலந்தாலோசித்துவிட்டு அனுப்பி வைக்கிறது. (சினிமாவில்தான் எவ்வளவு சுலபமாகக் காரியங்கள் நடக்கின்றன!)

# ஜாதி ஒழிப்பு: புதிய பார்வை

உயர்த்திய புருவங்களுடன் கிராமத்துக் குள்ளே நுழையும் லக்ஷ்மிதான் அதிகார மிடுக்கும், நேர்மையின் கம்பீரமும், லட்சிய நோக்கின் உறுதியும் ஒருங்கே அமையப் பெற்ற ஐ.ஏ.எஸ். சிறப்பு அதிகாரி — கருப்பாயி.

பூவும் பொட்டுமாக இருக்கும் விதவை மனோரமா, வட்டார அபிவிருத்தி அதிகாரி பூர்ணம் விசுவநாதனால் லக்ஷ்மிக்கு வீட்டு வேலை செய்ய அமர்த்தப்பட்டவர். அவருக்கு மன வளர்ச்சி குன்றிய ஓர் இரண்டுங்கெட்டான் மகன் — ஹாஜா ஷெரீஃப்.

லக்ஷ்மியால் கிராமத்துக் குழாய்களில் தண்ணீர் வருகிறது; வருடா வருடம் வரும் வெள்ளத்தைத் தடுக்க அணைகட்டுவதற்கு ஏற்பாடு நடக்கிறது... பொதுப் பணிகள் தவிர லக்ஷ்மி தனிப்பட்ட முறையிலும் பலருக்குப் பலவிதங்களில் உதவி, அன்பையும் நன்மதிப்பையும் சம்பாதித்துக் கொள்கிறார்.

அதிகாரம் என்ற இரும்புக் கவசத்துக்குப் பின்னால் மனிதாபிமானமும் அன்பும் நிறைந்த ஒரு பெண் மனம் இருப்பது புலனாகும் போது, ஆபீசர் அம்மா கிராம மக்களுடைய வாழ்க்கையின் ஓர் அம்சமாகவே ஆகிவிடுகிறார்.

அப்போதுதான் பிரவேசிக்கிறார் வில்லன் வினு சக்கரவர்த்தி. கருப்பாயியின் (லக்ஷ்மி) பூர்வீகத்தைப் பற்றிய ரகசியத்தை வெளியிட்டு விடுவதாக மிரட்டி, மிரட்டிப் பணம் பறிக்கிறார். வேறு வழியின்றி மிரட்டலுக்குப் பணிந்து, வினு சக்கரவர்த்திக்கு அவ்வப்போது சாராயக் காசு கொடுத்து வருகிறார் லக்ஷ்மி. ஆனால் மனச்சாட்சியுடன் போராட்டம் ஆரம்பமாகி விடுகிறது... ஒரு கட்டத்தில் வில்லனின் மிரட்டல் அவர் தொழில் நேர்மைக்கே சவால் விடும்போது பணிய மறுக்கிறார்.

கருப்பாயி உண்மையில் பிராமணப் பெண் காயத்ரி; ஒரு ஹரிஜன் என்று பொய்ச் சான்றிதழ் பெற்று, சலுகைகளை அனுபவித்து முன்னுக்கு வந்தவர் என்பதை

காப்பாற்றுகிறது.



அரசாங்கத்துக்கு ஒரு பெட்டிஷன் போட்டுத் தெரிவித்து விட்டு மாரடைப்பால் இறந்து போகிறார் வில்லன்.

அரசாங்கம் கருப்பாயி என்கிற காயத்ரி மீது வழக்குத் தொடர்கிறது. அவர் செய்த குற்றத்துக்கு உடந்தையாக இருந்த அவருடைய தந்தை பூர்ணம் விசுவநாதனும் ('யெஸ்மேடம்', 'நோ மேடம்' என்று கருப்பாயியிடம் பவ்யமாய்ப் பேசிய அதே பி. டி. ஓ. தான்) விசாரிக்கப்படுகிறார்.

ஒரு வழக்கறிஞரை அமர்த்திக் கொள்ளாமல் தந்தையும் மகளும் தாங்களே வாதாடுகிறார்கள். குற்றத்தை மறைக்கவோ மறுக்கவோ செய்யாமல் தண்டனையை ஏற்கத் தயார் என்கிறார் லக்ஷ்மி. ஆனால் சந்தர்ப்பச் சூழ்நிலைதான் தன்னை இத்தகைய தவறு செய்யத் தூண்டியது என்றும், ஜாதி அடிப்படையில் இட ஒதுக்கீடு எனும் கொள்கை காரணமாகத் தகுதியிருந்தும் தமக்கு வாய்ப்புக் கிடைக்காமல் போகலாம் என்று அஞ்சி, பொய் ஜாதிச் சான்றிதழ் பெற்றதாகவும் கூறுகிறார்.

இதற்கிடையே கிராமத்து மக்கள், தங்கள் ஆபீசர் அம்மா ஜாதி உணர்வுக்கு அப்பாற்பட்டவர், அவர் பேரில் உள்ள வழக்கை வாபஸ் பெற வேண்டும் என்று நீதிமன்ற வளாகத்திலேயே ஆர்ப்பாட்டம் செய்கின்றனர். வெகு ஜன விருப்பத்தைக் கண்டு அரசாங்கம் கடைசி நிமிஷத்தில் வழக்கை வாபஸ் பெற்று, லக்ஷ்மி தண்டனை பெறாமல் காப்பாற்றுகிறது.

சமீப காலமாக வெளிவந்து கொண்டிருக்கும் கிராமத்து வாசனையுள்ள படங்களுள் வித்தியாசமான படம் ஒரே ஒரு கிராமத்திலே. அவசியமான சம்பவங்களை மட்டுமே கொண்டு பின்னப்பட்ட அழுத்தமான திரைக்கதை; (அருந்ததி — நிழல்கள் ரவி உபகதை மட்டும் விதிவிலக்கு — புலியூர் சரோஜாவுக்கு வேலை கொடுக்கும் நல்லெண்ணத்தில் ஒரு டூயட் வேறு...) 'அடேயப்பா!' என்று நிமிர்ந்து உட்காரச் செய்யும் வசனம், பாடல்கள்; 'இதோ இருக்கிறேன்' என்று முந்திக் கொண்டு நிற்காமல் சம்பவங்களுடன் இழையும் இசை; அந்தந்தப் பாத்திரங்களாகவே மாறி வாழ்ந்திருக்கும் நடிக நடிகையர்களின் உழைப்பு... எல்லாம் சேர்ந்து இப்படத்தின் கலைச் சிறப்புக்களை உயர்த்தியுள்ளன.

கிராமத்து வயல்களிலும் நீரோடைகளிலும் காதல் காட்சிகளையும் டூயட்டுகளையுமே பார்த்துச் சலித்த கண்களுக்கு டில்லி கணேஷ் தம் பேரனை அந்த நிலைக்களன்களில் துரத்திக் கொண்டு ஓடுவதும், சிறுவன் எருமை மாட்டின் முதுகில் ஏறி அமர்ந்து கொண்டு பாடத்தை விடாமல் படிப்பதும்; தாத்தா பாடப் புத்தகத்தைப் பக்கம் பக்கமாகக் கிழித்து நீரோடையில் மிதக்க விட, பேரன் தான் தானாகப் பொறுக்கி எடுத்துச் சேகரிப்பதும்... ரம்மியமான பாடல் காட்சிகள்.

கொட்டும் மழையில் தம் வீட்டு வாசலில் நிராதரவாய் விடப்பட்ட குழந்தையை எடுத்து வந்து, லக்ஷ்மி அதற்குத் தாலாட்டுப் பாடித் தூங்க வைக்கும் காட்சியும் அந்தப் பாடலும் இனிமை. மழை நீர்க் கம்பிகளினூடே மணடுரூவி, மறு பக்கத்தில் தாய்மை ததும்பும் உணர்வுடன் லக்ஷ்மியைக் காட்டியிருக்கும் காமெரா கவிதை சொல்லியிருக்கிறது.

தமிழ் சினிமாவில் கூடக் கதையோடு





அம் மனுவை நிராகரித்தார். அன்று நீதி மன்றத்தில் "மோகன் ஒழிக" என்ற கோஷங்கள் எழுப்பப்பட்டன.

படம் வெளியாவதற்குச் சில நாட்களுக்கு முன்னதாக அதனைத் தடை செய்யக் கோரி சென்னை உயர்நீதி மன்றத்தின் Full Benchக்கு மீண்டும் மனுச் செய்தார் ஜகஜீவன் ராம் என்பவர். அண்மையில் தலைமை நீதிபதியாகப் பதவியேற்ற நீதிபதி ரத்தினவேல் பாண்டியன், மனுவை ஏற்றுக் கொண்டு வழக்கை நீதிபதி சத்தியதேவ் பொறுப்புக்கு மாற்றிக் கொடுத்தார். 22.3.88 அன்று நடந்த விசாரணையின் போது, படத்தை எதிர்ப்பவர்கள் கையில் placardகள் ஏந்தி மன்றத்துக்கு வந்ததாகத் தெரிகிறது.

படத்தைத் தடை செய்யக் கோரியதற்கு அளிக்கப்பட்டுள்ள காரணங்களுள் சில:

- படம் அரசியல் சாசனத்தை அவமதிக்கிறது.
- அரசியல் சாசனத்தை உருவாக்கியவர்களுள் ஒருவரான அம்பேத்காரை அவமதிக்கிறது.
- லக்ஷ்மி ஏற்றிருக்கும் கதாபாத்திரம் மேலும் பலரை இதே போன்ற குற்றமிழைக்கத் தூண்டும்.
- ஹரிஜனப் பெண் மனோரமாவின் மகன் (ஹாஜா ஷெரீஃப்) மூளை வளர்ச்சி குன்றியவனுகச் சித்திரிக்கப்பட்டுள்ளான்.
- கருப்பாயி என்ற பெயர் ஒரு நிஜ ஐ.

தொடர்புள்ள நகைச்சுவைக் காட்சிகள் இருக்க முடியுமா...? இருக்கின்றன இந்தப் படத்தில். விரசம் தட்டாத நகைச்சுவை என்பது மற்றொரு பிளஸ் பாயின்ட்.

லக்ஷ்மியோடு முதலிடத்துக்குப் போட்டி போடும் அளவிற்குச் சிறப்பாக நடித்துள்ளார் மனோரமா. அவர் தம் தோற்றத்துக்குச் சுயநிலை விளக்கம் அளிக்க, லக்ஷ்மி சிலிர்த்துப் போகும் காட்சியில் நாமும் சிலிர்க்கிறோம். 'சீரியஸ்' பாத்திரமாகப் பிரகாசிக்க முடியும் என்று மனோரமா மீண்டும் நிரூபித்துள்ளார். வில்லன் வினு சக்கரவர்த்தி தத்ரூபம்; பூர்ணம் விசுவநாதன்—வழக்கம் போல் ஆர்ப்பாட்டமில்லாத இயல்பான நடிப்பு.

இயக்குனர் ஜோதி பாண்டியனின் இரண்டாவது படமாம் இது. இதிலேயே அனுபவ மெருகு தெரிகிறது. போகப் போகப் புதிய சகாப்தங்கள் படைப்பாரோ?

**இ**ன்று, 'ஒரே ஒரு கிராமத்திலே' திரைப்படத்தைத் தடை செய்யக் கோரி மனு செய்துள்ளவர்களுள் ஒருவர் வை. பால சுந்தரம் (அம்பேத்கார் மக்கள் இயக்கம்).

இவரும் வேறு சிலரும் சேர்ந்து இப் படத்தைத் தடை செய்யக் கோரி முதன் முறை மனு செய்த போது நீதிபதி மோகன்



## அன்று சொன்னது

கல்கி 27.12.87 இதழில் இட ஒதுக்கீடு தொடர்பாகப் பேட்டியளித்திருந்தார்: அம்பேத்கார் மக்கள் இயக்கத்தைச் சேர்ந்த வை. பாலசுந்தரம். அதில் அவர் கூறுகிறார்:

"தாழ்த்தப்பட்டோருக்கான இட ஒதுக்கீடுகளை ஒவ்வொரு பத்தாண்டுகளாக நீடித்துக் கொண்டே போகிற அரசின் போக்கு ஆரோக்கியமானதாக



• கதை, வசனம், பாடல்கள் — வாலி.



• இயக்குனர் ஜோதிபாண்டியன்



ஏ. எஸ். அதிகாரியின் பெயரை நினைவூட்டு வதாக இருக்கிறது.

• படத்தில் பிராமணர் அல்லாதார் மட்டுமே குடிப்பதாகக் காட்டப்படுகிறது.

• இறுதிக் காட்சியில் நீதி மன்றத்தின் முன் நிலையில் மக்கள் போராட்டம் செய்வதாகக் காட்டப்பட்டுள்ளது. இது நம்புதற்குரியதாக இல்லை.

இதற்கு மறுபுறமாக, படத் தயாரிப்பாளர்கள், ஜனநாயக நாட்டில் எந்த ஒரு சட்டத்தையும் விமர்சிக்க எல்லோருக்கும் உரிமை உண்டு என்றும் ஒரு விமர்சனத்தை வெளியிட்டால் சட்டமே மாறிவிடும் என்று கூற முடியாது என்றும் சொல்கின்றனர். படத்தைத் தடை செய்வது அடிப்படைக் கருத்துச் சுதந்திரங்களைப் பாதிப்பதாகும்; மேலும், ஜாதி வேற்றுமை வேண்டாம் என்று உணர்த்துவது மட்டுமே படத்தின் நோக்கமே தவிர எந்த ஒரு ஜாதியையோ தனி நபரையோ குறை கூறும் நோக்கம் கிடையாது என்றும் கூறுகின்றனர். படத்தில் நீதிமன்றக் காட்சியில் வெளியாகியுள்ள, பொருளாதார அடிப்படையிலான இட ஒதுக்கீடு வாதம், ஏற்கெனவே முதல்வர் எம்.ஜி. ஆரால் முதலில் ஒப்புக் கொள்ளப் பட்டுப் பிறகு அரசியல் காரணங்களுக்காகக் கைவிடப்பட்ட ஒன்றுதான் என்று வாதாடுகின்றனர். எத்தனையோ பல வில்லன் ஹீரோக்கள் இன்று திரை உலகில் வலம் வரும் போது லக்ஷ்மி கதாபாத்திரத்தை மட்டும் எப்படி குறை கூற முடியும் என்று கேட்கின்றனர்.

கடைசியாக வந்த செய்திகளின்படி, (மார்ச் 22) சென்னைக் கல்லூரிகளைச் சேர்ந்த, நூற்றுக்கு மேற்பட்ட ஷெட்யூல் வகுப்பு மாணவர்கள் சென்னை உயர்நீதி மன்றம் முன்னர் ஒரே ஒரு கிராமத்திலே படத்தைத் தடை செய்யக் கோரி ஆர்ப்பாட்டம் நடத்தியிருக்கின்றனர்.

படம் திரையிடப்படுகிறதோ இல்லையோ, ஏகப்பட்ட பப்ளிசிடியைப் பெற்று விட்டது!

— சீதா ரவி.

இல்லை. எத்தனை முறைதான் நீடிப்புச் செய்து கொண்டே இருப்பது? இது தாழ்த்தப்பட்டவர்கள் மீது மற்றவர்களுக்கு ஒருவித வெறுப்பு ஏற்படவே வழி செய்யும். எனவே இந்தச் சலுகைகள் இத்தனை வருடங்களுக்குத்தான், என்று வரையறை செய்ய வேண்டும். சுதந்திரம் பெற்று நாற்பதாண்டு காலமாகியும் தாழ்த்தப்பட்ட சமுதாயம் மேம் படாததற்கு என்ன காரணம் என்று கண்டறிந்து களைய வேண்டும். அதன் பிறகு இப்போதுள்ள தனிச் சுடுகாடு, தனித் தண்ணீர்க் கிணறு, தனிக் காலனி என்கிற பாகுபாடே இருக்கக் கூடாது. அந்நிலையில் இம்மாதிரியான சலுகைகளை நிறுத்திக் கொள்ளலாம். இப்போது கூட கல்வித் தரத்திலும் பொருளாதாரத்திலும் சமூக அந்தஸ்திலும் உயர்ந்துவிட்ட ஓர் ஐ.ஏ.எஸ். அதிகாரி வீட்டுப் பிள்ளையை அவன் எந்த ஜாதியாக இருந்தாலும் சரி—பொதுக் கோட்டாவில் போட்டியிடச் சொல்லி விட்டுக் கிராமப்புற, தாழ்த்தப்பட்ட ஏழை மாணவனுக்கே முன்னுரிமை வழங்க வேண்டும்.



# ஏக்கம்

நெல்லை குரலோன்

முதுகிலிருந்த மூட்டையை எம். எஸ். பி. கடையின் பலகையில் நிமிர்த்தி விட்டுத் திரும்பினான் முத்தையா.

மூக்கன் அவனை நோக்கி வேகமாய் வந்து கொண்டிருந்தான். "ஏ... முத்தையா...! உனக்கு ஆண் கொழந்தை பொறந்திருக்காம்!"

கேட்டதுதான் தாமதம்.

ஓடிப் போய் மூக்கனை வாரி அணைத்துக் குதி குதியென்று குதித்துச் சந்தோஷத்தைக் கொண்டாடினான் முத்தையா.

இதை மூக்கின் மேல் விரல் வைத்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த சக மூட்டை தூக்கிகளிடம், விடை பெற்று, அவசரமாய் சைக்கிள் ஏறினான் முத்தையன்.

அவனுடைய நீண்ட நாள் ஆசை நிறைவேறப் போகிறது... இதற்காக எத்தனை நாட்கள் ஏங்கி ஏங்கித் தவித்திருக்கிறான் அவன்?

எல்லோருக்கும்பெண்டாட்டி ஆசைக்குப் பின்னால்தானே பிள்ளை ஆசை வரும்! ஆனால் முத்தையா இதற்கு நேர் எதிர். குழந்தை வேண்டும். அதற்குத் தேவை ஒரு பெஞ்சாதி. இந்த ரீதியில் யோசித்துத்தான் அவன் அவசர அவசரமாய்த் தாயம்மாளைக் கல்யாணம் பண்ணிக் கொண்டான்.

முதல் ராத்திரியில், "எனக்குப் பத்துமாசத்துல பிள்ளையைப் பெத்துத் தந்துடுவியா?" என்று திருப்பித் திருப்பி இவன் தொணதொணத்தபோது அதிர்ந்துபோனாள் தாயம்மாள்.

தாலி ஏறிய இரண்டு மாதங்கள் கழித்து, "நான் முழுகாம இருக்கேனுங்க" என்று அவள் சொன்னதும் இவன் குதித்த குதியைப் பார்த்து அதிசயித்தாள். அப்பப்பா! குழந்தை ஆசை இந்த மனுஷனுக்கு இந்த அளவுக்கு இருக்கிறதே! என்று ஆச்சரியப் பட்டாள்.

'உற்சாக' வெறியில் முத்தையனின் சைக்கிள் ஆஸ்பத்திரியை நோக்கிப் பறந்து கொண்டிருந்தது.

நேற்று பேப்பரில் படித்த தலைப்புச் செய்தி அவன் நினைவுக்கு வந்தது.

"யோவ்...! ரோட்டைப் பார்த்துச் சைக்கிளை ஓட்டய்யா..."

— டயரின் லேசான உரசலைக் கூடப் பொறுக்காமல் கூடைக்காரி ஒருத்தி கூப்பாடு போட்டாள்!

நாக்கைக் கடித்துக் கொண்டு ஒதுங்கினான்.

மீண்டும் எண்ண அலைகள்!

மூக்கன் வந்து சொன்னப்போ, அந்த நடு ரோட்டுல அப்படித் துள்ளிக் குதிச்சிருக்கக் கூடாதோ?

'ஊர்ல உலகத்துல இல்லாத பிள்ளை உனக்குப் பொறந்திருக்குன்னு தலைகால் புரியாம நிக்கறியே'ன்னு, எல்லாரும் நாளைக்குக் கிண்டல் பண்ணப் போறாங்க...

பண்ணட்டுமே! என்னுடைய ஏக்கம் எனக்கில்லே தெரியும்! இத்தனை நாளா மனசுல பூட்டி வெச்சிட்டிருக்கிற ஆசையை அவங்ககிட்டச் சொல்லிட முடியுமா என்ன...!

ஆஸ்பத்திரி வந்துவிட்டது. முத்தையாவைக் கண்டதும் தாயம்மாளின் அம்மா வெட்கத்துடன் ஒதுங்கினாள்.

தாயம்மாள் கண் திறந்தாள்.

தொட்டிலில் கிடந்த குழந்தையைப் பக்கத்தில் போய்க் குனிந்து பார்த்துவிட்டுப் பெண்சாதி பக்கம் திரும்பினான் முத்தையன்.

"ஏய்... புள்ள... எனக்கொரு பையன் பொறக்கணும். அவனை நான் எங்க தலைவர் கைல குடுத்து, அவர் வாயால பேர் வைக்கச் சொல்லணும்; அந்தப் பெருமைல நான் பூரிக்கணும்னு எவ்வோ நாளா கனவு கண்டுக்கிட்டிருந்தேன்... அந்தக் கனவு இப்ப நிறைவேறப் போவுது புள்ள... தலைவர் கைல குடுத்துப் பேர் வைக்கச் செய்யவே நமக்கொரு பய வந்து பொறந்திருக்கான் பாரு... நான் இப்பவே போய்ச் செயலாளர் அண்ணன்கிட்டே சொல்லி, தலைவர் எந்த ஊர்ல இருக்காரு, எப்பப் போய்ப் பார்க்கலாம்னு விசாரிக்கறேன்..."

புயல் வேகத்தில் வெளியேறினான் முத்தையா!

தாயம்மாள் விக்கித்துப் போய் அவன் வெளியேறிய திசையை வெறித்துக் கொண்டிருந்தாள்.

தில்லி தபால்:

# அழுது வடியும் தாஜ்மகால்!



• தாஜுக்கு ஆபத்து!

## திரவத் தங்கம்!

கூர்க்கா தேசிய விடுதலை முன்னணியின் கிளர்ச்சிகள் காரணமாக மக்கள் படும் அவதி ஒருபுறமிருக்க, டார்ஜிலிங் டீ ஏற்றுமதிக்குப் பெரிய அடி விழுந்து விட்டிருக்கிறது. டார்ஜிலிங் டீ உலகப் பிரசித்தி பெற்றது. சர்வதேச மார்க்கெட்டில் அதற்கு ஏகக் கிராக்கி. இந்தியாவுக்கு நிறைய அந்நியச் செலாவணி சம்பாதித்துத் தரும் ''திரவத் தங்கம்'' இந்த டீ.

இப்போது கெய்ஸிங் தலைமையிலான கூர்க்கா கிளர்ச்சி, தேயிலைத் தோட்டங்களுக்கும் பரவியதில் டார்ஜிலிங் டீ உற்பத்தி பாதிக்கப்பட்டிருக்கிறது. அந்த அளவுக்கு நமது அந்நியக் கடன்களும் பாதிக்கப்பட்டுள்ளன. மேல்நாடுகளில் டார்ஜிலிங் டீக்குப் பழகிப் போன நாக்குகள் வேறு டீயை ருசிக்கவும் பிடிக்காமல் தவிக்கின்றன!

## தாஜ் தரும் அதிர்ச்சி!

தாஜ் மஹால் — இதனைக் காதல் சின்னம் என்பர் பலர்; கொடுங்கோன்மையின் சின்னம் என்பர் சிலர். கலை அழகு என்பர் பலர்; தண்டச் செலவு என்பர் சிலர்.

எவ்வாறாயினும், அதன் வெண்மைப் பளபளப்பும் கம்பீரமும் அதனுடன் இணைந்த சரித்திரப் பிரசித்தி பெற்ற காதல் சம்பவமும் சேர்ந்து, அயல்நாட்டவரை ஆயிரக்கணக்கில் அன்றாடம் ஈர்க்கின்றன. நிலவொளியில் தாஜ் மஹாலைக் காணவென்றே திரும்பத் திரும்பத் தூர தேசத்திலிருந்து வருவோரும் உண்டு.

அத்தகைய தாஜ், இன்று தனது வெண்மைப் பளபளப்பைப் படிப்படியாக இழந்து வருகிறது. மங்கி, ஒளி குன்றி, அழுது வடிகிறது. ஒரு கருமை அதன் மேல் கவிந்து வருகிறது. காரணம், முன்யோசனையின்றி, இதன் அருகாமையில் நிறுவப்பட்ட மதுரா பெட்ரோலியம் சுத்திகரிப்பு ஆலைதான். அதிலிருந்து வெளிப்படும் புகைதான் இப்படி தாஜ் மஹாலைப் பாழ்படுத்தி வருகிறது.

ஒருமுறை பார்த்த பிறகு, இரண்டாண்டுகள் சென்று ஆசையோடு மறுமுறை பார்க்க வரும் அயல்நாட்டுச் சுற்றுலாப் பயணிகள் அதிர்ச்சி அடைகிறார்கள். ''இவ்வாறு தாஜ் ஒளி குன்ற அனுமதிக்கலாமா?'' என்று விசனத்துடன் வினவுகிறார்கள்.

பதில்தான் நம்மிடம் இல்லை!



## பெரிய மனிதருக்குச் சலுகை!

பிரிட்டிஷார் காலத்தில் ஆரம்பிக்கப்பட்ட சில கிளப்புகளில் இன்றைக்கும் உடைக் கட்டுப்பாடு உண்டு: ஸூட் அணிந்தவர்கள்தான் வரலாம்; கழுத்துச் சுருக்கமான 'டை' அவசியம் என்றிப்படி. இதை மீறிச் சிலர் செயல்படும் போது அங்குள்ள ஊழியர்கள் அவர்களை வெளியேறுமாறு கோருகிறார்கள். அவமானப்பட்டுப் பலர் திரும்புகிறார்கள். இவர்களில் சிலர் ரொம்பப் பெரிய மனிதர்களாக இருந்து விடுவதும் உண்டு. அப்போது அவர்கள் இதைப் பெரிய பிரச்னையாக்கி விடுவார்கள். பத்திரிகைகளில் செய்தி வந்து அமர்க்களப்படும்.

இது போன்ற கிளப்புகள் இப்போது தங்களுக்குள் பேசி ஒரு முடிவெடுத்துள்ளன. இத்தகைய சம்பவங்களால் கெட்ட பெயர் ஏற்படுவதைத் தவிர்க்கத் தீர்மானித்துள்ளன. ஐந்து நட்சத்திர ஹோட்டல்களும் இந்த எழுதப்படாத ஒப்பந்தத்தில் சேர்ந்துள்ளன. இனி சொகுசு கிளப்புகளுக்கும் நட்சத்திர ஓட்டல்களுக்கும் வேஷ்டி சட்டை அணிந்து கூடப் போகலாம். ஆனால் அப்படி போகிறவர் ரொம்பப் பிரபலமான பெரிய மனிதராய் இருக்க வேண்டும்! அப்போது கிளப் நிர்வாகிகளும் ஊழியர்களும் அவர்களின் ''அநாகரிக உடையை''ப் பார்த்தும் பாராதது போல் கண்களை மூடிக் கொள்வார்கள்!

பெரிய மனிதனாகவோ பிரபலமானவனாகவோ இல்லையென்றால்? வெளியேற்றப் படுவார், நிச்சயம்!

— ரவீந்தர் குமார்

# ஆகவே, செக்ஷன் 302 படி...




பட்டுக்கோட்டை பிரபாகர்

அந்தோணி கிரீச்சிடும் சகடையில் டம்ளர் கயிற்றை இழுத்து, கிணற்றிலிருந்து தண்ணீர் இறைத்தார். பூவாளியில் நிரப்பிக் கொண்டு அருகில் இருந்த ரோஜாச் செடிகளுக்கு ஷவர்பாத் செய்ய ஆரம்பித்தார். பக்கத்து வீட்டுக் கோழி அலாரம் வேலையைச் செய்து கொண்டிருக்க.. 'விடியட்டுமா, வேண்டாமா?' என்று யோசனையில் இருந்தது வானம். அருகாமை சர்ச் தேவன் புகழ் பாட ஆரம்பித்திருந்தது. அடுத்த தெரு கல்யாண மண்டபத்தில் ஊசிக் கீறல் சப்தத்தைத் தொடர்ந்து உருமி மேளம் சகிதமாக ஒரு டப்பாங்குத்துப் போட்டுக் கொண்டிருந்தார்கள். இன்றைய, நாளைய ரோஸ் நிற ரோஜாக்கள் நீர்ப்புள்ளியுடன் சன்னமாகத் தலையசைத்ததில் வார்த்தையில்லாத கவிதை ஒன்று ஒளிந்திருந்தது.

''டாடி...'' என்று ஓடி வந்தான் சின்னப் பையன் சிலேட்டுடன்.

''என்னடா, கணக்கு போட்டுட்டியா?''

''அதில்லே. யாரோ ஓர் அங்கிள் உங்களைப் பார்க்கக் கார்ல வந்திருக்காங்க.''

''கார்லயா?''

அந்தோணி பூவாளியை ஓரமாக வைத்து விட்டு, மடக்கிக் கட்டின வேஷ்டியைப் பிரித்து விட்டுக் கொண்டு வாசலுக்குப் போகிற வழியில் ஹாலில் இருந்த சோபா மேல் கிடந்த துண்டை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டார்.

வீட்டு வாசலில் அம்பாஸிடர். டிரைவிங் சீட்டை விட்டுக் கீழே இறங்காமல், சிகரெட் புகைத்துக் கொண்டு ஷ்யாம் இருந்தான்!

''சார், குட் மார்னிங். நீங்க என் வீட்டுக்கு... வாங்க சார். உள்ளே வாங்க'' என்று லேசாகப் பதறினார் அந்தோணி.

''இருக்கட்டும். ஒரு முக்கியமான விஷயம் சொல்லிட்டுப் போகலாம்னுதான் இவ்வளவு காலைல புறப்பட்டு வந்தேன். காருக்குள்ளே வாங்க. சொல்றேன்.''

''வீட்ல காப்பி சொல்லிட்டு வந்துடறேனே சார்.''

''ம்.. சரி. சொல்லிட்டு வாங்க. சர்க்கரை கொஞ்சம் தூக்கலா இருக்கணும் எனக்கு.''

அந்தோணி உள்ளே வந்து தன் மகள் ரெஜினாவிடம் இரண்டு காப்பி சொல்லி விட்டு மறுபடி வாசலுக்கு வந்து, முன் கதவைத் திறந்து ஷ்யாமுக்கு அருகில் அமர்ந்து கொண்டார்.

''நேத்து நிவிதாவுக்கு வந்த தபாலைப் பிரதி எடுத்தோமில்லையா? அதிலே இருந்த செய்திப்படி அவங்க சந்திக்கிறாங்களான்னு நான் ஒரு நம்பிக்கையான ஆளை அனுப்பிக் கண்காணிக்கிறேன்னு சொன்னேனில்லையா?''

''ஆமாம்.''

''அதே மாதிரி ஒரு நபரை இம்பீரி ஹோட்டலுக்குச் சாயங்காலம் அஞ்ச மணிக்குப் போகச் சொன்னேன். அ னுக்கு அவ்வளவு திறமை பத்தலே. நே ஹோட்டல் ரிஸப்ஷனுக்குப் போனதை பார்த்தானும். அங்கே நிவிதா இல்லையாம திரும்பிட்டானும். ரிஸப்ஷனிஸ்ட் கிட்டே விசாரிச்சியாடான்னு முழிக்கிறான். மடப்



பய! ரிஸப்ஷன்ல காத்திருக்கிறதா எழுதியிருந்தான். காத்திருந்து சந்திச்சதும் வேறே எங்காவது போயிருக்கலாமில்லையா?''

''தாராளமா!''

''அதே ஹோட்டல்ல அந்த ஹரி ரூம் போட்டிருந்திருக்கலாம். அவங்க ரெண்டு பேரும் அங்கே போய்ப் பேசியிருக்கலாம்.''

''இருக்கலாம்.''

''அதனால் நீங்க என்ன செய்றீங்க... இன்னிக்குக் கொஞ்சம் சீக்கிரமா வீட்டை விட்டுப் புறப்படுங்க. நேரா இம்ப்பீரியல் ஹோட்டல் போங்க. ரிசப்ஷன்ல விசாரிங்க. ஹரின்னு ரூம் எதுவும் போட்டிருக்குதான்னு பாருங்க. நேத்து சாயங்காலம் நிவிதா ஹரியைத் தேடி வந்தாளான்னு விசாரிங்க. தகவல்களோட ஆபீசுக்கு வாங்க.''

''சரி சார்.''

''இதைச் சொல்லத்தான் வந்தேன். புறப்படட்டுமா?''

''சார், காப்பி சொல்லிட்டேன். ஒரு நிமிஷம்'' என்று காரின் ஜன்னல் வழியாக வீட்டுக்குள் பார்த்த அந்தோணி, ''ஸ்டீஃபன், அக்காவைச் சீக்கிரம் எடுத்துட்டு வரச் சொல்லு'' என்றார்.

''உங்களுக்கு எத்தனை பிள்ளைங்க சார்?''

''மூணு பொண்ணுங்க. ரெண்டு பையன்ங்க. போன வருஷம்தான் ஒய்ஃப் தவறிட்டா. ஒரு பொண்ணுக்குக் கல்யாணம் முடிச்சுட்டேன். அடுத்தது க்யூ. எம். சில பி.காம் செகண்ட் இயர் பண்ணுது. மத்ததெல்லாம் சின்னப் பிள்ளைங்க.

பைஜாமா அணிந்த, சமீப நிமிடங்களில் குளித்து முடித்து, இன்னும் மேக்கப் செய்து கொள்ளாத ரெஜினா, ஒரு ட்ரேயில் இரண்டு பீங்கான் கோப்பைகளை வைத்துக் குனிந்து உள்ளே நீட்டினாள்.

''இவதான் என் ரெண்டாவது பொண்ணு. ரெஜினா. சார்தான் என் மேனேஜரம்மா.''

''வணக்கம் சார்!'' என்றாள்.

''காலேஜுக்கு பஸ்லதான் போறி

யாம்மா?'' என்றான் ஷியாம்.

''இல்லே சார். சைக்கிள்ல போறேன்.''

''ஏன் மிஸ்டர் அந்தோணி, நம்ம கம்பெனிலதான் வாகனம் வாங்கக் கடன் தர்றோமே... ஒரு மொபெட் வாங்கித் தரலாமே நீங்க. ஒரு அப்ளிகேஷன் போடுங்க. சீக்கிரத்திலே சேங்ஷன் பண்ணி வாங்கித் தர்றேன்.''

''எங்கப்பாவுக்குக் கடன்னாலே பிடிக்காது சார்.''

''அப்படியா? நல்ல பாலிஸிதான்'' என்று பருகி முடித்த கப்பை ட்ரேயில் வைத்தான். அந்தோணி இறங்கிக் கொண்டு, கதவைச் சாத்தினார்.

''நீங்க சொன்னபடி விசாரிச்சுகட்டு வர்றேன் சார்.''

''சரி. வர்றேன். வர்றேன்ம்மா'' என்று புறப்பட்டான். 'ரெஜினா' என்று சொல்லிப் பார்த்துக் கொண்டான்.

அறையின் ஜன்னல் அருகே நின்று கொண்டு பிரஷ் மேல் பேஸ்ட்டைப் பிதுக்கிக் கொண்டாள் நிவிதா. தாமரைச் செல்வி சேலையைத் தூக்கிச் செருகிக் கொண்டு அறைக்குள்ளேயே ஸ்கிப்பிங் செய்து கொண்டிருக்க... தலையணையை அணைத்துக் கொண்டு, நைட் கவுன் அணிந்த பத்மா இன்னும் உறங்கிக் கொண்டிருந்தாள்.

விடுதிக்கு உள்ளேயே இருந்த வெற்று வெளியில் நெட் கட்டி நான்கு பெண்கள் ரிங்பால் விளையாடிக் கொண்டிருப்பதைப் பார்த்துக் கொண்டே பல் துலக்கினாள் நிவிதா.

நேற்று மாலை ஹோட்டலுக்கு வரச் சொல்லி, ரெஸ்ட்டாரெண்ட்டுக்கு வரச் சொல்லி, கடைசியில் சந்திக்காமல் அவமானப்படுத்தப்பட்டதில் ஏற்பட்ட ஆத்திரம் தணிந்திருந்தது.

இன்றைக்கு விநோத்குமாரைச் சந்திப்பது என்று தீர்மானித்தாள். இனி முகமில்லாத, விலாசமில்லாத எந்தத் தகவல்களுக்கும் செவிசாய்ப்பதில்லை என்கிற தெளிவுக்கு வந்திருந்தாள்.

ஒரு முடிவுக்கு வந்து விட்டதில் மனத்தில் இரைச்சல் குறைந்திருந்தது. தவிப்பு காணாமல் போயிருந்தது.

ஸ்கிப்பிங் ஆடி முடித்துக் கழுத்தெல்லாம் வியர்வை வடியத் தாமரைச் செல்வி ''வா நிவிதா, போய்க் காப்பி சாப்பிட்டுட்டு வந்துடலாம்'' என்றாள்.

அறையின் மூலையில் இருந்த சிமெண்ட் வாஷ் பேசினில் வாய்க் கொப்புளித்து விட்டு வந்தாள் நிவிதா. இருவரும் வராந்தாவில் நடந்து, அடுத்தடுத்த அறைப் பெண்களில் அறிமுகமானவர்களுக்கு 'குட் மார்னிங்' சொல்லிவிட்டு, படிகளில் இறங்கிக் கீழே வந்த போது எதிர்ப்பட்ட விடுதி ஊழியை, ''உங்க ரூமுக்குத்தான் வந்துக்கிட்டிருக்கேன். நிவிதா, உங்களைப் பார்க்க உங்க தம்பி வந்திருக்கார்'' என்றார்.

''சரி. அப்போ நீ போய்ப் பாரு'' என்றாள் தாமரைச் செல்வி.

''நீயும் வாயேன். அறிமுகப்படுத்தி வைக்கிறேன்.''

இருவரும் விசிட்டர்ஸ் ஹாலுக்கு வந்தார்கள். கையில் ஒரு சின்ன காகிதப் பொட்டலத்துடன், நெற்றியில் விபூதியுடன், முகத்தில் மலர்ச்சியுடன் இருந்த வித்யாசாகர் எழுந்து, ''அக்கா... கொச்சினுக்கு இண்டர்வியூ போய்ட்டு வந்தேனில்லே, தந்தி வந்திருக்குக்கா. உடனே சேரச் சொல்லி இருக்காங்க'' என்றான் சந்தோஷம் கண்களில் நீர்த்திரையைத் தொங்க விட.

''வித்யா, வித்யா, கங்கிராஜுலேஷன்ஸ்டா'' என்று அவன் கையைப் பற்றிக் குலுக்கினாள். ''வெரிகுட். அப்பாடா.. உன் சோதனைக் காலம் முடிஞ்சுது வித்யா!''

''இது தற்காலிக வேலைதான்க்கா. நிரந்தரமாக்கப்படணும்னு வேண்டிக்க. நானூத் தம்பது சம்பளம். அப்புறம் சில சலுகைகளா நூறு ரூபா வரும். குவாட்டர்ஸ் இருக்கு. அது இலவசம்தான். எப்படியும் என் செலவு போக முந்நூறு ரூபாய் அம்மாவுக்கு அனுப்ப முடியும்கா.''

''ரெண்டு மூணு மாசத்துக்கு நீ எதுவும் அனுப்ப வேணாம் வித்யா. நல்ல சட்டை, பேண்ட் நாலு செட் வாங்கிக்க. எப்ப புறப்படணும் நீ?''

''இன்னிக்கு ராத்திரியே புறப்படறேன்க்கா. எதிலே டிக்கெட் கிடைக்குதோ அதை வாங்கிக்க வேண்டியதுதான்.''

''ஸாரி. அறிமுகப்படுத்த மறந்துட்டேன். வித்யா, இவ தாமரைச் செல்வி. என் ரூம் மேட். சதர்ன் ரயில்வே ஆஃபீஸ்ல வேலை.''

''வணக்கங்க'' என்றான் வித்யாசாகர்.

''வணக்கம். வேலை கிடைச்சதுக்கு ஸ்வீட் எதுவும் இல்லையா?''

''தற்போதைய சக்திக்கு ரூம்ல இருந்த சர்க்கரையைத்தான் பொட்டலம் கட்டி எடுத்துட்டு வர முடிஞ்சது. உங்களைப் பார்த்ததும் பாக்கெட்ல போட்டுக்கிட்டேன். கேட்டுட்டிங்க. இதுவும் ஸ்வீட்தானே?''

வித்யா சாகர் பொட்டலம் எடுத்துப் பிரித்து நீட்ட, தாமரைச் செல்வியும், நிவிதாவும் எடுத்துக் கொண்டு வாயில் போட்டுக் கொண்டார்கள்.

''இரு வித்யா, வர்றேன்'' என்று நிவிதா உள்ளே சென்று, சில நிமிடங்கள் கழித்து வந்து, ''இந்தா, செலவுக்கு வச்சிக்க'' என்று நூறு ரூபாயை நீட்டினாள்.

''என்கிட்டே இருக்குக்கா!''

''பரவாயில்லை. வச்சிக்கக்கா'' என்று அவனை மாதிரியே பேசி அவன் சட்டைப் பாக்கெட்டில் பணத்தைச் செருகிவிட்டு, ''எந்த ரயில்ல டிக்கெட் வாங்கியிருக்கேன்னு எனக்கு ஆபீசுக்கு போன் பண்ணிச் சொல்லிடு. நான் உன்னை வழியனுப்ப வர்றேன்'' என்றாள்.

''பரவாயில்லைக்கா. எதுக்குச் சிரமம் உனக்கு? நான் போய்க்கிறேன்.''

''சென்ட்ரல் ஸ்டேஷன் உள்ளே நான்



• வயிற்றைப் பற்றி மட்டுமே நினைப்பவன் தலையைப் பட்டினி போடுகிறான்! — சீனப்பழமொழி.
— ஏ. கே. தாசர்.



வந்ததில்லை. இந்தச் சாக்குலயாவது வா விடமாட்டே போலிருக்கே. அவசியம் போன் பண்ணு. அம்மாவுக்கு நான் தபால் எழுதறேன். நீயும் எழுது.

"சரிக்கா. நான் புறப்படறேன். வர்றேங்க."

வித்யா சாகர் சென்றதும் நிவிதா குளித்து, உடுத்தி, டிஃபன் சாப்பிட்டு, அலுவலகம் புறப்படும் முன்பு வினோத் குமாருக்கு போன் செய்தாள்.

அவனே எடுத்து, "ஹலோ!" என்றான்.

"வினோத், ஒரு நல்ல சேதி. தம்பிக்கு ஒரு வேலை கிடைச்சிடுச்சி. கொச்சின்ல. ஒரு தனியார் நிறுவனத்தில். இன்னிக்கு ராத்திரியே புறப்படறான்."

"வெரிகுட். வெரிகுட். ரொம்ப சந்தோஷம் நிவிதா."

"வர்றீங்களா, ரெண்டு பேருமா அவனை வழியனுப்பலாம்?"

"வித்யா சாகர் எத்தனை மணிக்குப் புறப்படறார் நிவிதா?"

"டிக்கெட் வாங்கிட்டு போன் செய்யறதாச் சொன்னான்."

"எதுக்குக் கேட்டேன்னா வழியனுப்பிட்டு நாம தனியா பேச எவ்வளவு நேரம் இருக்கும்னு பார்க்கத்தான்."

"பேசலாம் வினோத். நிறைய பேசணும். வினோத், எனக்கு அஞ்சு மணிக்கு ஆபீஸ் முடியுது. நீங்க என் ஆபீஸ் கட்டட வாசல்ல காத்திருக்கீங்களா?"

"அதைவிட வேறே என்ன வேலை நிவிதா?"

"சரி. சாயங்காலம் சந்திக்கலாம்."

"இரு. வச்சிடாதே. வாக்குத் தவறாதே. சூரிதார் ட்ரெஸ் போட்டுக்கிட்டு வர்றே. மறந்துடாதே. ஓக்கே?"

சற்றுத் தயங்கி விட்டு, "ஓக்கே" என்றான். அவசரமாக அறைக்குத் திரும்பித் தாமரைச் செல்வியின் சிவப்புச் சூரிதாருக்கு மாறிக் கொண்டு, அலுவலகத்திற்குப் புறப்பட்டாள் நிவிதா.

ஷியாம் டெல்லி கால் பேசி முடிக்கும் வரை காத்திருந்தார் அந்தோணி.

ஷியாம் ரிசீவரை அதன் தாயுடன் சேர்த்து விட்டு, "என்ன சார், போனீங்களா? விசாரிச்சீங்களா?" என்றான்.

"நேத்து டூட்டில இருந்த பத்மனாபன்ங்கிற பையன் வர லேட்டாயிடுச்சு. அவன் வர்ற வரைக்கும் காத்திருந்து விசாரிச்சுட்டு வர்றேன் சார். அதான் லேட்."

"அதனால பரவாயில்லை. விஷயம் என்ன? அதைச் சொல்லுங்க."

"ஹரிங்கிற பேர்ல ரூம் எதுவும் யாரும் போடலை சார்."

"சரி."

"ஆனா ஹரியும், நிவிதாவும் நேத்து ஹோட்டல்ல உள்ள ரெஸ்ட்டாரெண்ட்ல சந்திச்சிப் பேசியிருக்காங்க."

"எப்படிச் சொல்றீங்க?"

"அந்த ரிஸப்ஷனிஸ்ட் பத்மநாபன் விவரமாச் சொன்னான் சார். மொதல்ல ஹரி வந்தானாம். நிவிதான்னு யாராச்சும் தேடி வந்தாங்களான்னு விசாரிச்சானாம். ஹெல்மெட்டைக் கொடுத்துட்டு நிவிதா வந்தா ரெஸ்ட்டாரெண்ட்டுக்கு அனுப்பச் சொல்லிட்டுப் போனானாம். அதே மாதிரி நிவிதா வந்திருக்கா. விஷயம் சொன்னதும் ரெஸ்ட்டாரெண்ட் போயிருக்கா. அரை மணி நேரம் கழிச்சு ஹரி வந்து, ஹெல்மெட்டை வாங்கிக்கிட்டுப் பார்த்துட்டேன்னு சொல்லிட்டுப் போய்ட்டானாம் சார்."

சற்று நேரம் கண்களை மூடி யோசனையில் இருந்தான் ஷியாம்.

"மிஸ்டர் அந்தோணி, ஹரியோ நம்ம எதிரி கம்பெனியோட ஆளு. இந்தப் பொண்ணு சொந்தக்காரன்னு சொல்லுது. ஹரி உங்களை விலை பேசினவன். அவன் ரகசியமா சந்திக்க இடம்—நேரம் குறிச்சுத் தபால் எழுதறான். இந்தப் பொண்ணும் போய்ச் சந்திக்குது. இதெல்லாம் வச்சுப் பார்க்கிறப்போ...

"நிவிதாவை நாம் ஸ்ட்ராங்கா சந்தேகப்பட்டுத்தான் ஆக வேண்டியிருக்கு. பேபி ஹரிக்கு உதவத் தீர்மானிச்சிருக்கு. இது வரைக்கும் எந்தச் சதியும் இங்கே நடக்கலை. ஆனா நாம் எச்சரிக்கையா இருக்கணும். என்ன செய்யலாம் சார் இப்போ?"

"ஆபீஸ் டைம் முடிஞ்சதும் என் ரூமுக்கு வரச் சொல்றேன். நீங்களும் கூட இருங்க. வெட்டு ஒண்ணு, துண்டு ரெண்டுன்னு விசாரிச்சுடலாம். என்ன சொல்றீங்க?"

"சரி சார்."

"நாம நிவிதாவைச் சந்தேகப்படறது, விசாரிக்கிறது எதுவும் நம்ம ரெண்டு பேருக்குள்ளே மட்டும்தான் இருக்கணும். புரிஞ்சுதா? போங்க" என்று அவரை அனுப்பினை ஷியாம் தன் டைரியைத் திறந்தான். அதற்குள் தானே எடுத்திருந்த நிவிதாவின் வண்ணப் படம் இருந்தது. அதைப் பார்த்துப் புன்னகை செய்தான்.

நீ என்னை நெருங்கி வருகிறாய் நிவிதா பெண்ணே!

(தொடரும்)

### நினைவிருக்கிறதா?

மிக எளிய போட்டிதான்!

பரிசோ ரூ. 1000!

இந்தக் கதை 20 — 22 அத்தியாயங்கள் வரை வளர்ந்ததும் பட்டுக்கோட்டை பிரபாகர் எழுப்பும் சில கேள்விகளுக்கு ஓரிரு வார்த்தை பதில்களை ஒரு தபால் கார்டில் நீங்கள் எழுத வேண்டும். அத்துடன் இந்தத் தொடரில் உங்களை மிகவும் கவர்ந்த 'நறுக்'கென்ற நாலு வரிகளைக் குறிப்பிட வேண்டும்.

கவனமாகப் படித்து வந்தால் பரிசு உங்களுக்குத்தான்!

## ஜெர்மானியக் கதை:

# ரகசிய மோதிரம்

**நா**ன் சார்லியை ஏன் விரும்பத் தொடங்கினேன் என்பதை என்னாலேயே சரியாகச் சொல்ல முடியாது. ஓர் ஆண்டுக்கு முன்பு தான் நான் சார்லியைச் சந்தித்தேன். நாங்கள் நண்பர்களாகத்தான் ஒருவரையொருவர் நெருங்கினோம். எங்களிடையே திருமணம் அல்லது வருங்காலத்தைப் பற்றிய பேச்சே எழவில்லை. இதைப் பற்றிப் பேச்செடுக்கச் சார்லி என்னைக் காட்டிலும் சங்கோசப்பட்டான். மருத்துவக் கல்லூரியில் படித்துத் தேறி முழு டாக்டராக வெளியே வர இன்னும் சில வருஷங்கள் அவனெதிரே கிடந்தது ஒரு காரணமாயிருந்திருக்கலாம்.

சார்லி ஒற்றை நாடிதான்; நல்ல உயரம், அடர்ந்த தலைமயிரும், கருவிழிகளும் அவனுக்கு எடுப்பாக இருந்தன. பேசி விடை பெறும் பொழுதெல்லாம், 'மாரியோ! எனக்கு உன்னை ரொம்பப் பிடித்திருக்கிறது' என்று கூறுவான். ஒருவேளை இதற்கு மேலும் கூற அவனுக்குத் துணிவுதான் இல்லையோ, அல்லது அதற்கு மேல் பேசுவது அறிவுடைமை ஆகாது என்று எண்ணினானோ, தெரியாது.

எதுவும் சொல்வதற்கு முன்னால், நான் என்னைப் பற்றியும் சொல்லி விடுகிறேன். நான் என் தந்தையோடு வசித்து வந்தேன். எனக்குக் கூடப் பிறந்த சகோதர — சகோதரிகள் கிடையாது. அம்மா இறந்து எத்தனையோ காலமாகி விட்டது. அப்பா மருத்துவக் கல்லூரியில் பேராசிரியர். அதைத் தவிர எத்தனையோ சமுதாய நல நிறுவனங்களோடு தொடர்பு கொண்டிருந்ததால், அவர் பெரும்பாலும் வீட்டுக்கு நேரத்தில் வருவதில்லை. நான் ஒரு நிறுவனத்தில் செயலராகப் பணியாற்றிக் கொண்டிருந்தேன். அலுவலகம் முடிந்ததும் நேரே வீட்டுக்கு வருவேன். உணவு தயாரித்து வைத்து விட்டுத் தந்தையை எதிர்நோக்கியிருப்பேன். சார்லியைச் சந்திக்கிற வரையில் இதுவே என் அன்றாட வேலையாக இருந்தது. அப்புறம் தான் அதில் மாற்றம் கண்டது. நாங்கள் வெளியே உலாவச் செல்லலானோம். சனிக்கிழமை இரவு ஆற்றங்கரையின் மிருதுவான மணலில் நடை பயிலுவோம். அல்லது நல்ல படம் ஓடினால் பார்க்கப் போவோம்.

இப்படித்தான், ஒரு நாள் இரவு நாடகம் ஒன்று பார்த்து விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தோம், நானும் சார்லியும். திடீரென்று ஒரு கடைக்கு முன் நின்றோம். ரொம்ப அழகான கடை. அதன் ஷோ கேஸில் வகை வகையான நகைகள் பளபளத்துக் கொண்டிருந்தன. நானும் சார்லியும் அவற்றை ஆவலோடு பார்த்துக் கொண்டிருந்தோம். அப்பொழுது என் பார்வை நன்முத்துக்கள் பதித்த மோதிரங்கள் மீது விழுந்தது. என் பார்வையின் உட்பொருளைப் புரிந்து கொண்ட சார்லி, என் கையை அழுத்தி, "மாரியோ! உனக்கு இவற்றில் எந்த மோதிரம் பிடித்திருக்கிறது?" என்று கேட்டான். சொல்ல வாய் எடுத்தவன் எப்படியோ சமாளித்துக் கொண்டு விட்டேன். சார்லியின் பேச்சில், அப்பொழுதே அந்த மோதிரங்களில் ஒன்றை வாங்கி விடும் ஆர்வம் தொனித்தது. ஆனால், நான் அவ்வளவு சீக்கிரம் திருமணத்தை உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற துடிப்பில் இல்லை. எனவே, எல்லாவற்றிலும் விலை உயர்ந்த மோதிரத்தைக் காட்டி வேடிக்கையாக, "இது!" என்றேன்.

சார்லியினால் அந்த மோதிரத்தை வாங்க முடியவில்லை. அவ்வளவுக்கு அவனுக்குச் சக்தி இல்லை. அவன் மனத்துள் என்னைப் பற்றி என்ன எண்ணினானோ, எனக்குத் தெரியாது. அப்போதைக்கு நாங்கள் அங்கிருந்து நகர்ந்து விட்டோம். சிறிது தொலைவில் இருந்த ஓர் உணவு விடுதியில் காப்பி குடிக்



கச் சென்றோம். அப்பொழுது ஓர் அழகிய வாலிபன் எங்கள் மேஜையண்டை வந்தான். சார்லியோடு பேசத் தொடங்கினான். பேச்சுக்கிடையில் அவன் பார்வை என் மீது விழுந்தது. வாட்ட சாட்டமான, கவர்ச்சி மிகுந்த இளைஞன் அவன்.

அவன் எங்கள் மேஜையிலேயே உட்கார்ந்தான். சார்லி எங்கள் இருவரையும் அறிமுகப்படுத்தி வைத்தான். அவன் சார்லியின் நண்பன், வகுப்புத் தோழன். பெயர் ஜாக். ஜாக் என்னோடு கை குலுக்கிய பொழுது, அதில் ஒரு துணிச்சல், சுதந்திரம் தெரித்தது. சார்லியிடம் அது குறைதான்.

சில தினங்களுக்குப் பின், ஓர் இரவு. அலுவலகத்திலிருந்து வீடு வந்தவள் சமையலில் ஈடுபட்டேன். தொலைபேசி ஒலித்தது. நான் ரிசீவரைக் கையில் எடுத்தவாறே யாராயிருக்கும் என்று யோசிக்கலானேன். ''ஹலோ, நான் ஜாக் பேசுகிறேன்!'' என்றதும் அவன் முகம் என் மனக் கண் முன்னே

## பர்ட்ரெண்ட் ஜேபட்

தோன்றியது. உடலில் விந்தையான ஒரு புல்லரிப்பு ஏற்பட்டது. ''மாரியோ! நாம் எப்பொழுது சந்திக்கலாம்?'' எப்படி மிடுக்காகக் கேட்டான் அவன்? ''எப்பொழுது வேண்டுமானாலும்!'' என்னையறியாமலே என் வாய் விடையளித்தது. ''இப்பொழுது சந்திக்கலாமா?'' என்ற அவன் கேள்விக்கு நான் மௌனம் சாதித்தேன்.

பதினைந்து நிமிஷங்களில் அவன் என் வீட்டில் இருந்தான். இரண்டாவது சந்திப்பிலேயே அவன் சங்கோசம் எத்தனையோ விலகி விட்டது. சார்லிக்கு ஒரு வருஷம் ஆயிற்று என் கையைப் பிடிக்கவே. ஆனால் ஜாக் அவனுக்கு நேர் மாறுதல்! ஜாக்கின் கையில் ஒருநாள் நான் ஒரு மோதிரத்தைக் கண்டேன். அதை அவன் எனக்கு அணி



விக்க விரும்பினான். "ஜாக்! ஒரே இரவுக்குள் நீ எத்தனையோ கட்டங்களைத் தாண்டி விட விரும்புகிறாய். சிறிது யோசிக்க வேண்டாமா? ஒருவரையொருவர் புரிந்து கொள்ள முயல வேண்டாமா? அதற்கு அவகாசம் வேண்டாமா?" என்று கேட்டேன்.

"சரி, அப்படியானால் சார்லியோடு உறவு ஏற்பட்டு விட்டதோ?"

"இல்லை. நாங்கள் இருவரும் நல்ல நண்பர்களாகத்தான் இதுவரை பழகுகிறோம்!" என்றேன்.

"சனிக்கிழமை இரவு உனக்கு ஏதும் புரோகிராம் இல்லையே!"

"ஒவ்வொரு சனிக் கிழமையும் எனக்குச் சார்லியோடு புரோகிராம் இருக்கிறது. ஏறக்குறைய ஒரு வருஷமாக இந்த முறை நீடிக்கிறது. இதிலே தற்சமயம் நான் எந்தவிதமான மாற்றமும் செய்ய விரும்பவில்லை. ஏனென்றால் சார்லி ரொம்ப ரொம்ப நல்லவன். எந்த வகையிலும் நான் அவன் மனத்தை முறிக்க விரும்பவில்லை. ஆனால் சிறுகச் சிறுக இதில் மாற்றம் கொண்டுவர முயல்கிறேன். சார்லியோடு அறவே தொடர்பு விட்டுப் போகுமானால், அந்த நேரத்தை உன்னோடு கழிக்க முயல்கிறேன்!"

"அன்றைக்கே நான் உனக்கு மோதிரம் அணிவித்துத் திருமண உறுதி செய்து கொள்ளுகிறேன்!" உறுதி தொனிக்க முறுவலித்தான் ஜாக்.

**அ**டுத்த சனிக் கிழமை இரவு சார்லியைச் சந்தித்த பொழுது அவன் நிலை விந்தையாக இருந்தது. அவன் முகத்தில் வாட்டமும் ஏமாற்றமும் தாண்டவமாடின. என்னால் அவனது அந்த நிலையைக் காண முடியவில்லை. நான் ஜாக்கிடம் சொன்னதை அடியோடு மறந்து விட்டேன். சார்லியும் நானும் ஒரு ரெஸ்டாரெண்டுக்குப் போனோம். அவன் பெரும்பாலும் பேசாமலே இருந்தான். சிறிது நேரம் கழித்து, அன்று தன் பேராசிரியர்களுடன் சேர்ந்து மிக வெற்றிகரமான ஓர் ஆப்பரேஷன் செய்ததாகவும், பேராசிரியர்கள் அவனை மிகப் புகழ்ந்ததாகவும் வருங்காலத்தில் அவன் பெரிய சர்ஜனாக விளங்குவான் என்று சொன்னதாகவும் சொன்னான். அப்புறம் சட்டென்று முன்னே குனிந்து என் கண்களோடு கண்களை மோத விட்டு, "அந்த நாள் தொலைவில் இல்லை, மாரியோ! நாம் நகரத்துக்கு வெளியே அழகான பெரிய மாளிகை கட்டி வாழ்வோம். மாளிகைக்குப் பின்னால் ஒரு சிறு தோட்டம் அமைப்போம். அங்கே..." என்று ஆசை மீதூரச் சொன்னான்.

"வருங்காலத்தைப் பற்றி இத்தனை பெருங்கோட்டை கட்டக் கூடாது, சார்லி! கனவு நனவாக வில்லையென்றால் மனிதன் அழிந்து விடுவான்" என்று அவன் ஆர்வத்துக்கு அணை கட்டினேன். அப்புறம் பெரிதாகத் தத்துவம் பேசுபவள் போல, "நாளையைப் பற்றி யாருக்கு என்ன தெரியும், சார்லி? நாளைக்கு யார் மனம் எப்படி இருக்குமோ? என்னையே எடுத்துக் கொள்ளேன்! ஒருவாரத்துக்குள் நான் உன் நண்பன் ஜாக்கோடு மிகவும் நெருங்கி விட்டேன். இதற்குள் அவன் எனக்கு இரு முறை விருந்து வைத்து விட்டான். எனக்கு அவனை ரொம்பப் பிடித்து விட்டது!" என்றேன்.

இருந்தாலும் பயந்து கொண்டே அவன் கண்களை நோக்கினேன். எந்த விதமான எதிர் விளைவுகளையும் என்னால் காண முடியவில்லை. வருத்தமோ, துயரமோ, ஆத்திரமோ ஒரு குறியும் தென்படவில்லை. அவன் அமைதியான குரலில், "ஜாக் ரொம்ப நல்ல பிள்ளை. கொஞ்சம் துறுதுறு என்றிருப்பான்!" என்றான்.

**அ**தன் பின்னர் நானும் ஜாக்கும் அடிக்கடி சந்திக்கலானோம். ஜாக் புயல் வேகத்தினனாக இருந்தான். ஒரேயடியாக அவசரப்பட்டான். உடனடியாக நான் சார்லியின் தொடர்பை அறுத்துக் கொள்ள வேண்டும் என்றும், நான் ஜாக்கை விரும்புவதாகவும் அவனையே மணம் புரிந்து கொள்ளப் போவதாகவும் தெளிவாகச் சொல்லிவிட வேண்டும் என்றும் அடிக்கொரு தடவை வற்புறுத்தினான். ஆனால் அதுதான் என்னால் முடியவில்லை. நான் அப்படி எண்ணியபொழுதெல்லாம் சார்லியின் கள்ளங்கபடமற்ற வெளிறிய முகம் என் பார்வையைச் சுற்றி வட்டமிடும்.

அடுத்த சனிக்கிழமை சார்லி என்னைப் பார்க்க வந்தான். அவன் நிலை முன்னைக் காட்டிலும் மோசமாக இருந்தது. முகம் ஒரேயடியாக வெளுத்துப் போயிருந்தது. என்ன பேசினாலும் அவனுக்கு மூச்சு வாங்கியது. அவனிடம் கண்ட அந்த மாறுதல் எனக்கு வியப்பை அளித்தது. அவன் புகழும் விழிகளோடு என்னைநோக்கி, "நீ ரொம்ப அழகாக இருக்கிறாய். நான் உன்னை மிகவும் நேசிக்கிறேன்" என்றான். அடுத்த கணமே சட்டென்று ஏதோ நினைவு வந்தவனாகச் சட்டைப் பைக்குள் கைவிட்டு ஒரு வெல்வெட்டு டப்பாவை எடுத்தான். அதன் மூடியைத் திறந்து என் முன்னே நீட்டினான். அன்று ஒருநாள் நான் நகைக் கடையில் பார்த்து ஆசைப்பட்ட அதே விலையுயர்ந்த மோதிரம் அதில் ஜொலித்தது. ஆனால் அந்த மோதிரத்தை அப்பொழுது என்னால்

"நீங்க கட்சியை விட்டு விலகப் போறதா பத்திரிகையிலே செய்தி வந்திருக்கே...?"

"அதுபற்றி எனக்கு ஒண்ணும் தெரியாது. மேலிடம்தான் அதை முடிவு பண்ணணும்!"

— கடுவை. கோபால்சாமி.



**வாசகர் பங்கு:**

# தளபதி இடமதி



**பரிசு ரூ.400/-**

ஜோக்கர் என்ற சொல்லை நாடாளுமன்றத்திலேயே சபாநாயகர் பலராம் ஜாக்கர் ஏற்றுக் கொண்டிருக்கும்போது, நமது ஆஸ்தான ஜோக்கர் சும்மா இருக்கலாமா? 'விட்' அடிக்க அவருக்கு உதவுங்கள். முதல் தடவை உங்கள் துணுக்கு பிரசுரமானால் பரிசு ரூ. 25/—. அடுத்தடுத்துப் பல இதழ்களில் ஒருவரே எழுதிய சில துணுக்குகள் இடம் பெற்றால் ஒவ்வொரு முறையும் பரிசு இரட்டிப்பாகும். அதிகபட்சப் பரிசு ரூ. 400/—. மேடைப் பேச்சாகவோ, உரையாடலாகவோ கீழே உள்ள கூப்பனில் எழுதி அனுப்புங்கள். உறை மீது, ''தளபதி இடமதி'' என்று குறிப்பிடவும்.

கூப்பன்:

கல்கி இதழ்: 3.4.88 — முடிவு தேதி: 12.4.88.

தளபதி இடமதி: ''...........................................

...........................................................

...........................................................

...........................................................

...........................................................

...........................................................

...........................................................

...........................................................

...........................................................

...........................................................

...........................................................''

என் பெயர்: ...............................................

விலாசம்: ...............................................

...............................................

ஏற்க முடியவில்லை. அந்த மோதிரம் என்னைத் தர்மசங்கடமான இரட்டைப் பாதையில் கொண்டு வந்து நிறுத்தி வேடிக்கை பார்த்தது. ''காலங் கடந்து விட்டது, சார்லி!'' நான் மனத்துக்குள்தான் முணுமுணுத்தேன்.'' இப்பொழுது நான் ஜாக்குக்குச் சொந்தமாகி விட்டேன். நான் துணிந்து முன்பே உன்னிடம் உண்மையை ஒளிக்காமல் இருந்திருந்தால், எவ்வளவோ நன்றாயிருந்திருக்கும். இந்தத் துயரமான நிலை ஏற்பட்டிருக்காது!

நான் நடந்து கொண்ட முறை சார்லிக்கு அதிர்ச்சியைத் தந்தது. அவன் விசித்திரமாக என்னைப் பார்த்தான். அவன் கைகள் நடுங்குவதை நான் கண்டேன். அதற்குள் அவன் தன்னைச் சமாளித்துக் கொண்டு, அமைதியான குரலில், ''மாரியோ! எனக்கு எவ்விதமான விளக்கமும் தேவையில்லை. நான் தன்னல நோக்கம் படைத்தவன் அல்ல. உன் மகிழ்ச்சியே என் மகிழ்ச்சி. நீ வேறு யாரையாவது ஏற்பதாக முடிவு செய்திருந்தால், அதுவே சரியான முடிவு. நீ யாரை ஏற்க முடிவு செய்கிறாயோ அவனையும் நான் உன்னை நேசிப்பது போலவே நேசிப்பேன்!'' என்றான். சார்லியின் குரலில் அன்று நான் கண்ட துயரத்தையும் துடிப்பையும் என் வாழ்க்கையில் நான் வேறு யாரிடமுமே காணவில்லை. சட்டென்று நான் அவன் அருகில் போய் அமர்ந்து கொண்டேன். துயரம் தோய்ந்த குரலில், ''உன்னை நான் மிகவும் நேசிக்கிறேன். இனியும் நாம் இனிய நண்பர்களாகவே இருக்க முடியும். என் இதயத்தில் என்றைக்குமே இடம் உண்டு. உன்னைப் போன்ற நண்பர்கள் இந்தக் காலத்தில் எங்கே கிடைக்கிறார்கள்?'' என்றேன்.

சார்லி நடுங்கும் கைகளோடு டப்பாவை மூடிப் பையில் வைத்துக் கொண்டான். களைத்த குரலில், ''மெத்த நன்றி, மாரியோ! வருங்காலத் துணைவனாக என்னை நீ ஏற்க விரும்பவில்லை என்பதைத் தெளிவாக விண்டு வைத்து விட்டாய். உனது இந்த உண்மையை நான் பெரிதும் பாராட்டுகிறேன். உன்னைப் போன்ற துணிச்சல் எனக்கு ஒருநாளுமே இல்லாமற் போய் விட்டது. இருந்திருந்தால், 'நான் உன்னை எப்படி மதிக்கிறேன், என் உள்ளத்தில் உனக்கு எத்தகைய இடம் கொடுத்திருக்கிறேன்?' என்பதைத் தெளிவாக்கியிருப்பேன். அப்படித் தெளிவாக்கியிருந்தால், நீ இன்றி நான் இல்லை என்பது உறுதியாகி இருந்திருக்கும். உன்னை நான் தவிர்க்க முடியாதவனாக, தேவைப்பட்டவனாகக் கருதுகிறேன் என்பதும் புலனாகியிருந்திருக்கும். இத்தனை நீண்ட நாள் நட்புக்கிடையில் நான் ஒரு நாள் கூட உன்னை முத்தமிட முயன்றதில்லை என்பதை நீ அறிவாய். ஏனெனில் காதலில் உடல் இன்பம் காண்பதில் எனக்கு அவ்வளவாக நம்பிக்கை கிடையாது. என் காதல் ஒருதலைப்பட்சமாக இருந்து விட்டதற்காக நான் மிகவும் வருந்துகிறேன்!'' என்றான். அவன் தலை தாழ்ந்தது.

எனக்கு இதயமே வெடித்தாற் போலாகி விட்டது. இரத்தம் பீறிக் கொண்டு வருகிறாற் போலவும் தோன்றியது. எத்தனை அடக்கியும் முடியாமல் நான் அழுது விட்டேன். ''சார்லி! சார்லி! நீ எத்தனை பெரிய மனிதன்! என்னால் உன்னையும் உன்னோடு கழித்த ஓராண்டையும் ஒரு நாளும் மறக்க முடியாது. நீ வாழ்வில் கிடைத்தற்கரிய பொருள், சார்லி! கிட்டிய பொருளைக் கை நழுவ விடுவது பெரும் அசட்டுத்தனம். என்றாலும் நான் பிரியும் இரு பாதைகளுக்கிடையே வழி தெரியாமல் நிற்கிறேன். என் மூளை இயங்கவில்லை. எதுவும் புரியாமல் திண்டாடுகிறேன்!'' என்றேன்.

சார்லி ஏதோ சொல்ல வாய் எடுத்தான். அதற்குள் தொலைபேசி ஒலித்தது. நான் ரிஸீவரை எடுத்தேன். எதிர் முனையில் இருந்தது ஜாக். ''நீ சார்லிக்கு எல்லாவற்றையும் சொல்லி விட்டாய் அல்லவா?''

''இல்லை, ஜாக்! இன்னும் சொல்லவில்லை. எனக்கு இன்னும் கொஞ்சம் அவகாசம் கொடு!'' நான் மரித்த குரலில் கூறினேன்.

''மாரியோ! உனது இந்த இரண்டும் கெட்டான் வியாபாரம் எனக்கு விளங்கவே இல்லை. நீ அந்தப் பையனுக்காக மனத்துள் மறுகுகிறாய். அவனிடம் அப்படி என்ன விசேஷம் இருக்கிறது? தரித்திரப் பயல் அவன். உனக்கு என்ன பெரிதாகச் சாதிக்கப் போகிறான்? தன் உடலைத் தூக்கவே அவனுக்கு வலு இல்லை. உன் சுமையை அவன் எங்கிருந்து தாங்கப் போகிறான்?'' இப்படிக் கேட்ட ஜாக்கின் குரலில் கோபம் மட்டும் தாண்டவமாடவில்லை; குத்தலும் தாண்டவமாடியது. ''உனக்குத் தெரியுமா, திருமணத்தை உறுதி செய்து கொள்ள அவன் மோதிரம் வாங்கின கதை?'' தொலைபேசியில் அவன் சிரித்தான். அப்பப்பா! அந்தச் சிரிப்பில்தான் என்ன கசப்பு!

''அது என்ன கதை?'' நான் கேட்டேன்.

''சொல்கிறேன், கேளு!'' அவன் நஞ்சு தோய்ந்த குரலில் கூறினான்: ''உன் உண்மையான காதலனிடம் உனக்கு மோதிரம் வாங்கிப் போடக் கூடக் காசு கிடையாது. அந்த மோதிரத்தை வாங்குவதற்காக அவன் வருஷம் முழுவதும் தன் இரத்தத்தை விற்றுக் கொண்டிருந்தான். அவன் பதினொரு முறை இரத்தம் விற்றான். இந்த மோதிரம் வாங்குவதற்கு அவன் பணம் சேர்த்த லட்சணம் இது. அவன் முகத்தைத்தான் நீ பார்த்திருப்பியே! எப்படி இரத்தம் செத்தாற் போல் வெளுத்திருக்கிறது, பார்த்தாயா?''

நான் குரல் நடுங்கக் கூறினேன்: ''ஜாக்! காலத்தால் செய்த இந்த உதவிக்கு மெத்த நன்றி. ஒருநாளும் நான் உன் இந்த உதவியை மறக்க மாட்டேன்!'' அடுத்த கணம் நான் ரிசீவரை வைத்து விட்டேன்.

இது நடந்து எத்தனையோ ஆண்டுகள் ஓடிவிட்டன. இப்பொழுது நான் நகரத்துக்கு வெளியே அழகிற் சிறந்த மாபெரும் வெள்ளை மாளிகையில் வாழ்கிறேன். என் எதிரே என் இரு குழந்தைகள் ஜானும் டாலியும் விளையாடிக் கொண்டிருக்கிறார்கள். நேற்று இரவு நடந்த சமாசாரம். நான் தூங்கப் படுக்கைக்குப் போய்க் கொண்டிருந்தேன். என் பெண் டாலி திடீரென்று, ''அம்மா! நானும் கல்யாணம் செய்து கொள்வதாயிருந்தால் ஒரு சர்ஜனைத்தான் கல்யாணம் செய்து கொள்ளுவேன்!'' என்றாள்.

''இதெல்லாம் நீ இப்பொழுதே யோசிக்க வேண்டிய விஷயம் இல்லியே! இருந்தாலும் நீ ஏன் ஒரு சர்ஜனைக் கல்யாணம் செய்து கொள்ள விரும்புகிறாய்?'' என்று மென்னகையோடு கேட்டேன்.

''ஏனென்றால், அவனும் இது மாதிரி விலையுயர்ந்த அழகான மோதிரம் வாங்கித் தாரணும் என்பதற்காகத்தான்!'' என்று அவள் அறியாக் குரலில் கூறினாலும் பார்வை மட்டும் என் மோதிரத்தின் மீது பதிந்திருந்தது.

''ஆண்டவன் அருளில் உன் ஆசை நிறைவேறுவதாக! உனக்கு வரப் போகும் கணவன் உனக்கு இதைக் காட்டிலும் அழகான விலையுயர்ந்த மோதிரம் வாங்கித் தரட்டும். அதில் எனக்கு மகிழ்ச்சியே. ஆனால், என் விரலில் பார்க்கிறாயே, இந்த மோதிரம், இதைப் போல யாருக்கும் இலேசில் கிடைத்து விடாது. பெரிய அதிர்ஷ்டம் செய்திருக்கணும். இதற்கு யாரும் விலை மதிக்க முடியாது. இது விலைமதிப்பற்றது!'' என்றேன்.

டாலிக்கு என் பேச்சு விளங்கவில்லை. கேள்விக் குறியோடு அவள் என் மீது ஓட விட்ட பார்வை வலை பின்னியது.

தமிழாக்கம்: ரா. வீழிநாதன்



மேடையில் பேசுபவர்: ''எங்கள் கட்சிக் கொள்கையைப் பற்றி உங்களுக்கு நான் அதிகம் கூற வேண்டியதில்லை... ஒரே தலைவன், ஒரே பாதை, ஒரே கொள்கை, ஒன்றே குலம் ஒருவனே தேவன்....''

கூட்டத்திலிருந்து குரல்: ''ஆனா கோஷ்டி மட்டும் ஏழு!....''

—— மேல்மங்கலம் பத்மாராகவன்.

# பொன்னியின் செல்வன்



## இரண்டாம் அத்தியாயம்

## மோகவலை

வயது முதிர்ந்த பிறகு இளம்பெண்களை மணந்து கொள்வோர் எப்போதும் சந்தேகம் என்னும் மாயா உலகத்தில் வாழ்கிறார்கள். அவர்களுக்கு அன்னியர்கள் யாரைக் கண்டாலும் இயற்கையான அருவருப்பு ஏற்படுகிறது. பழுவேட்டரையருக்கு இத்தகைய அருவருப்பு ஏற்பட அதிகக் காரணம் இருந்தது. நந்தினி தமக்கு முன்னால் வந்து நின்று பேசத் தொடங்கியதை அவர் சிறிதும் விரும்பவில்லை. அதே சமயத்தில் நந்தினியைக் கடிந்து கொள்ளவும் அவரால் முடியவில்லை.

எனவே நந்தினி கேட்ட கேள்விக்கு மறுமொழியாக, 'ராணி! இந்த உலகத்தில் நமக்குத் தெரியாதவர்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். எல்லாரையும் நாம் பார்த்து அறிந்திருக்க முடியாதல்லவா? அதனால் நமக்கு நஷ்டமும் இல்லை!'' என்றார்.

இதைக் கேட்ட பார்த்திபேந்திரன்,

அமரர் கல்கி

''ஐயா! சோழ நாட்டின் பொக்கிஷ மன்னரின் பட்டமகிஷிக்கு என்னைத் தெரியாததினால் நஷ்டம் ஒன்றுமில்லை; நஷ்டம் எனக்குத்தான். ஆகையால் என்னை நானே தெரிவித்துக் கொள்கிறேன். அம்மணி! என்னைப் பார்த்திபேந்திரப் பல்லவன் என்று அழைப்பார்கள்!'' என்று சொன்னான்.

''ஓ! அப்படியா? தங்கள் பெயரை நான் கேள்விப்பட்டிருக்கிறேன்!'' என்றாள் நந்தினி.

''பார்த்திபேந்திரா! ஏன் விருதுகளை விட்டு விட்டுப் பெயரை மட்டும் சொல்லிக் கொண்டாய்? இவ்வளவு தன்னடக்கமும் பணிவும் எப்போது ஏற்பட்டன? நந்தினி! இவன் வெறும் பார்த்திபேந்திரன் அல்ல. வேங்கியும் கலிங்கமும் வென்று வீரபாண்டியன் தலைகொண்ட பார்த்திபேந்திரப் பல்லவன்!'' என்று பழுவேட்டரையர் பரிகாசக் குரலில் கூறினார்.

நந்தினியின் முகம் ஒரு கண நேரம் புயல் குமுறும் வானத்தைப் போல் இருண்டது. அவளுடைய இரு கண்களிலிருந்தும் இரு மின்னல்கள் தோன்றி ஒளி வீசி உடனே மறைந்தன. அடுத்த கணம் அவள் கலகலவென்று சிரித்

தான்.

"ஐயா! 'வீர பாண்டியன் தலை கொண்ட' பெருமையான பட்டத்தை எத்தனையோ பேர் சூட்டிக்கொள்கிறார்கள்! அதற்கு ஏதேனும் கணக்கு உண்டா?" என்று கேட்டாள்.

"அம்மணி! தனாதிகாரி என் பேரில் உள்ள அபிமானத்தினால் அவ்விதம் கூறினார். உண்மையில் அந்த விருதுக்கு நான் உரியவன் அல்ல. வீரபாண்டியன் தலைகொண்ட பெருமை ஆதித்த கரிகாலர் ஒருவருக்கே உரியது!"

"அது ஏன் அப்பா, அவ்விதம் சொல்கிறாய்? செத்த பாம்பை அடித்த பெருமையில் உனக்குக் கொஞ்சமும் பங்கு வேண்டாமா?" என்று பழுவேட்டரையர் பரிகாசக் குரலில் கேட்டு விட்டுக் குறுஞ்சிரிப்புச் சிரித்தார்.

"இல்லை, அரசே! இல்லை! ஆதித்த கரிகாலர் செத்த பாம்பைக் கொல்லவில்லை. அவர் வாளை ஓங்கிய போது வீரபாண்டியன் முழு உயிர் உள்ள பாம்பாகத்தான் இருந்தான். அவன் உயிரைக் காப்பாற்றுவதற்காகத் தேவலோகத்து மோகினியை ஒத்த ஒரு மங்கை முன்னால் வந்து நின்று கை கூப்பிக் கெஞ்சினாள். வாளை ஓங்கியவன் நானாக இருந்தால் உடனே அவ்வாளைத் தூர வீசி எறிந்திருப்பேன்; வீரபாண்டியன் பிழைத்துப் போயிருப்பான்!" என்று பார்த்திபேந்திரன் பழுவேட்டரையருக்குப் பதில் சொன்னான். ஆனால் அவனுடைய கண்களோ நந்தினியின் முகத்தைக் கூர்ந்து நோக்கின.

நந்தினி, பேச்சு அபாயகரமாகப் போய்க் கொண்டிருப்பதை உணர்ந்தாள்.

பழுவேட்டரையரைத் திரும்பிப் பார்த்து, "நாதா! அந்தப் பழைய கதை இப்போது எதற்கு? இவர் இங்கு வந்த காரியம் என்னவென்று விசாரிக்கலாமே!" என்றாள்.

உடனே பழுவேட்டரையரும், "ஆம், தம்பி! பழைய கதை வேண்டாம்! உன் கதையைச் சொல்! காஞ்சியிலிருந்து எப்போது புறப்பட்டாய்? எங்கே பிரயாணம்? இங்கு இறங்கி வந்த காரணம் என்ன?" என்று கேட்டார்.

நந்தினியைப் பார்த்ததால் மதி மயங்கிப் போயிருந்த பார்த்திபேந்திரனும் தான் வந்த காரியத்தை நினைவு கூர்ந்தான்.

"ஐயா! என்னை மன்னிக்க வேண்டும்! ஏதேதோ பேசிக் கொண்டிருந்து விட்டேன். மிக முக்கியமான செய்தியுடன் வந்திருக்கிறேன். சோழ நாட்டையே துயரக் கடலில் மூழ்கச் செய்யக் கூடிய பயங்கரமான செய்தி. ஈழத்திலிருந்து என்னுடன் இந்தக் கப்பலில் புறப்பட்டு வந்த இளவரசர் அருள்மொழி வர்மர் சுழற் காற்று அடித்த சமயம் கடலில் குதித்து விட்டார். அவருடைய கதி என்ன ஆயிற்று என்று தெரியவில்லை. ஒருவேளை இங்கே வந்து ஒதுங்கினாரோ என்று பார்ப்பதற்கு வந்தேன்!" என்றான் பார்த்திபேந்திரன்.

அவன் கூறி முடிப்பதற்குள் "ஆகா! என்ன சொன்னாய்?" என்று பழுவேட்டரையர் அலறினார். சுழற்காற்றினால் வேருடன் பறிக்கப்பட்ட நெடு மரத்தைப் போல் தரையில் வீழ்ந்தார்.

அவரைத் தாங்கி எடுப்பதற்காகப் பார்த்திபேந்திரன் பாய்ந்து சென்றான். நந்தினி குறுக்கே நின்று அவன் நீட்டிய கையைப் பற்றி அகற்றினாள். பழுவேட்டரையரின் அருகில் தான் உட்கார்ந்து அவருடைய தலையைத் தன் மடியின் மீது எடுத்து வைத்துக் கொண்டாள். "தண்ணீர்! தண்ணீர்!" என்று கத்தினாள்.

கூடாரத்திலிருந்து சேடிப் பெண் தண்ணீர் எடுத்துக் கொண்டு வந்தாள். இன்னும் சில வீரர்களும் கலங்கரை விளக்கக் காவலரும் அவர் குடும்பத்தாரும் ஓடி வந்தார்கள். நந்தினி மிக்க கம்பீரத்துடன் அவர்களையெல்லாம் அப்பால் நிற்கும்படி ஏவினாள். பழுவேட்டரையரின் முகத்தில் தண்ணீர் தெளித்தாள். "நாதா! நாதா!"

என்று கொஞ்சும் குரலில் அழைத்தாள். சில நிமிஷங்களுக்கெல்லாம் கிழவரின் கண்கள் திறந்தன. உடனே நினைவும் வந்தது. சட்டென்று எழுந்து உட்கார்ந்தார்.

''நந்தினி! சற்று முன் என் காதில் விழுந்தது உண்மையா? இந்தப் பல்லவன் என்ன சொன்னான்? பொன்னியின் செல்வனைக் கடல் கொண்டு விட்டதாகச் சொன்னான் அல்லவா? அந்த வீரகுமாரன் சின்னஞ்சிறு குழந்தையாயிருந்தபோது இந்தக் கைகளால் அவனைத் தூக்கித் தோளில் வைத்துக் கொண்டு மகிழ்ந்தேன். இதே கைகளினால்தான் அவனைச் சிறைப் பிடித்துக் கொண்டு வரும்படியான கட்டளையில் முத்திரை வைத்தேன். ஐயோ! சோழநாடு என்னைப் பற்றி என்ன நினைக்கும்? தமிழகம் என்ன நினைக்கும்?'' என்று பழுவேட்டரையர் தலையில் அடித்துக் கொண்டார். வயிரம் பாய்ந்த அந்த வீரக் கிழவர் அவ்விதம் மனம் கலங்கிப் புலம்பியதை அதுவரையில் நந்தினி பார்த்ததில்லை; யாருமே கண்டதில்லை.

''நாதா! பதறுகிறீர்கள்! இவர் இன்னும் செய்தி முழுதும் சொல்லவில்லையே! முழுதும் கேட்டு விட்டு மேலே செய்ய வேண்டியதைப் பற்றி யோசிப்பது நலம் அல்லவா?'' என்றாள் நந்தினி.

''ஆமாம்; நீ சொல்வது சரிதான். பார்த்திபேந்திரா! சீக்கிரம் சொல்! பொன்னியின் செல்வர் கடலில் முழுகி இறந்து விட்டார் என்று சொன்னாய் அல்லவா? அது உண்மையா? அல்லது ஏதோ துர்நோக்கத்துடன் கற்பனை செய்து சொல்கிறாயா? பசித்திருக்கும் புலியுடன் விளையாடாதே! ஜாக்கிரதை!'' என்று அக்கிழவர் கண்களில் கனல் எழும்படி நோக்கிக் கர்ஜித்தார்.

''ஐயா! மன்னிக்க வேண்டும்! இளவரசர் இறந்து விட்டார் என்று நான் சொல்லவில்லை. அவ்வளவு பயங்கரமான நஷ்டம் இத்தமிழகத்துக்கு ஏற்பட்டிருக்கும் என்று என்னாலும் நம்ப முடியவில்லை. சுழற்காற்று உக்கிர நிலையை அடைந்திருந்த போது அவர் என் கப்பலிலிருந்து கடலில் குதித்தார் என்றுதான் சொன்னேன். கடவுள் அருளால் ஒருவேளை பிழைத்திருக்கலாம். இந்தக் கடற்கரையிலே வந்து ஒதுங்கியிருக்கலாம். அந்த ஆசையுடனேதான் பார்ப்பதற்கு இங்கே வந்தேன்...''

''சுழற்காற்று அடித்தபோது கடலில் குதித்தாரா! எதற்காக? ஏன் குதித்தார்? உன்னுடைய கப்பலில் அவர் ஏன் ஏறினார்? அவர் குதித்த போது நீ என்ன செய்து கொண்டிருந்தாய்?'' என்று பழுவூர் அரசர் பரபரப்புடன் கேட்டார்.

நந்தினி குறுக்கிட்டு, ''ஐயா! இவர் இலங்கைக்கு எதற்குப் போனார் என்பதிலிருந்து விவரமாகச் சொல்லட்டும்!'' என்றாள்.

''ஆமாம்; உள்ளது உள்ளபடியே சொல்லு! உண்மையைச் சொல்லாவிட்டால் நீ உயிருடன் தப்ப முடியாது! உன்னை...'' என்று பழுவேட்டரையர் பற்களை நறநறவென்று கடித்தார்.

''அரசே! உண்மையைத் தவிர வேறு எதுவும் சொல்லி எனக்குப் பழக்கம் இல்லை. நான் பொய் சொல்ல நினைத்தாலும் என் நாக்குச் சொல்லாது. கேளுங்கள்! தாங்களும் கடம்பூர்ச் சம்புவரையரும் மற்றும் பலரும் சோழ குலத்துக்கு விரோதமாகச் சதி செய்கிறீர்கள் என்று காஞ்சிக்குச் செய்தி எட்டியது.''

''பொய்! பொய்! முற்றிலும் பொய்!''

''செய்தி பொய்யாயிருக்கட்டும். அதுவே நான் வேண்டுவது. காஞ்சிக்கு எட்டிய செய்தியையே நான் கூறி





னேன். அதன்பேரில் திருக்கோவலூர் மலையமானும் ஆதித்த கரிகாலரும் என்னை ஈழத்துக்கு அனுப்பினார்கள். அருள்மொழிவர்மரைக்கையோடு அழைத்து வரும்படி அனுப்பினார்கள்......"

இவ்வாறு ஆரம்பித்துப் பார்த்திபேந்திரன் தான் இலங்கை சேர்ந்தது முதல் நடந்ததையெல்லாம் தான் அறிந்தவரையில் விவரமாகக் கூறினான்.

கதை முடிந்ததும் பழுவேட்டரையர், "கடவுளே! சோழநாட்டுக்குப் பெருங்கேடு வந்துவிட்டது! இந்தப் பாவியினால்தான் வந்தது! இளவரசரைச் சிறைப்படுத்திக் கொண்டு வரும்படி நான் அல்லவோ கட்டளை போட்டேன்? நான் அல்லவோ மரக்கலங்களை அனுப்பினேன்?" என்று கதறினார்.

"அரசே! தங்கள் குற்றம் ஒன்றும் இல்லை. தாங்கள் கட்டளை பிறப்பித்திரா விட்டாலும் இந்த மனிதருடைய கப்பலில் இளவரசர் ஏறிக் காஞ்சிக்குப் பயணமாயிருப்பார் அல்லவா? வீணாக நொந்து கொள்ள வேண்டாம். நம்முடைய செயல்களுக்கு மேலே விதியின் செயல் ஒன்று இருக்கிறது. மேலும்..."

நந்தினி இவ்விடத்தில் உரத்துப் பேசுவதைச் சட்டென்று நிறுத்திப் பழுவேட்டரையரின் காதோடு ஏதோ சொன்னாள்.

பழுவேட்டரையரின் முகம் சிறிது மலர்ச்சி அடைந்தது. "ஆமாம்; ஆமாம்! அது எனக்குத் தோன்றாமல் போயிற்று!" என்றார்.

பிறகு பார்த்திபேந்திரனைப் பார்த்து, "பல்லவா! உன் கப்பலுக்குப் போய் நான் சோதித்துவிட்டு வரப் போகிறேன். அதுவரை நீ இங்கேயே இருக்க வேண்டும். தப்பிச் செல்ல முயல வேண்டாம். ஓட முயற்சி செய்தால் உடனே வேல் எறிந்து கொல்லும்படி என் வீரர்களுக்குக் கட்டளையிட்டு விட்டுப் போகப் போகிறேன். ஜாக்கிரதை! முதுகிலே காயத்துடன் சாகாதே! உன் பரம்பரை வீர பரம்பரை!" என்றார்.

"வந்தனம், ஐயா! தப்பித்து ஓடும் எண்ணமே எனக்குக் கிடையாது. அத்தகைய எண்ணமிருந்தால் உங்கள் வீரர்கள் யாராலும் தடுக்க முடியாது. முதுகிலே காயப்படும் உத்தேசமும் எனக்கு இல்லை!" என்றான் பல்லவன்.

"அரசே! இவரைப் பற்றித் தாங்கள் கவலைப்பட வேண்டாம். நானே பார்த்துக் கொள்கிறேன். தப்பியோடப் பார்த்தால் இதோ இந்தக் கத்தி உடனே இவர் மார்பில் பாயும்! நீங்கள் நிம்மதியாகப் போய்க் கப்பலைச் சோதித்து விட்டு வாருங்கள். மாலுமிகளையும் விசாரியுங்கள், இவர் கூறியதெல்லாம் உண்மைதானா என்று." — இவ்விதம் நந்தினி கூறிக் கொண்டே இடுப்பிலிருந்து ஒரு சிறிய கத்தியை எடுத்தாள்.

"ராணி! உனக்கு ஏன் இந்தப் பொறுப்பு? நீ கூடாரத்துக்குள் போயிரு! அல்லது தியாக விடங்கரின் வீட்டில் போய் இரு. இவனை நம் வீரர்களே கவனித்துக் கொள்வார்கள். அல்லது இவனையும் நான் என்னோடு கப்பலுக்கு அழைத்துப் போகிறேன்......"

"நான் வரவில்லை, ஐயா! நான் தங்களுடன் வந்தால் தங்களுக்கு மறுபடியும் சந்தேகமாகத்தானிருக்கும். மாலுமிகள் எனக்காகச் சாட்சி சொல்லி விட்டதாய் நினைப்பீர்கள். நான் இவ்விடத்தை விட்டு நகர மாட்டேன். தாங்கள் கவலையின்றிப் போய்



வாருங்கள்!''

''நாதா! தாங்கள் கப்பலிலிருந்து திரும்பி வரும் வரையில் நானும் இங்கேயேதான் இருக்கப் போகிறேன். இங்கிருந்தபடி தங்களைப் பார்த்துக் கொண்டே இருப்பேன்!'' என்றாள் நந்தினி.

பிறகு பழுவேட்டரையரின் காதோடு ''இவன் இங்கே ஏதேனும் துப்பறிய வந்திருக்கிறானோ, என்னமோ, யார் கண்டது? மேலும் இளவரசரைப் பற்றிய செய்தி தாங்கள் திரும்பி வரும் வரையில் யாருக்கும் தெரியக் கூடாது'' என்றாள்.

பழுவேட்டரையர் தலையை அசைத்து விட்டுப் படகில் ஏறினார். படகு மரக்கலத்தை நோக்கிச் சென்றது.

படகு சிறிது தூரம் போகும் வரையில் நந்தினி படகையே பார்த்துக் கொண்டிருந்தாள். அதே சமயத்தில் பார்த்திபேந்திரன் கண் கொட்டாமல் தன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்ததை அவள் உணர்ந்தாள். சட்டென்று அவன் பக்கம் திரும்பினாள். பார்த்திபேந்திரன் வெட்கித் தலைகுனிவான் என்று எதிர்பார்த்தாள். ஆனால் தேன் மலரைப் பார்த்து விட்ட வண்டு அப்பால் திரும்புமா?

நந்தினி கூரிய சிறிய கத்தியை எடுத்து மறுபடி காட்டி, ''ஜாக்கிரதை! தப்பி ஓடப் பார்க்க வேண்டாம்!'' என்றாள்.

''தேவி! கத்தியைக் காட்டிப் பயமுறுத்துவானேன்? தப்பியாவது? ஓடவாவது? வலையில் அகப்பட்ட மீன் எவ்விதம் தப்பி ஓடும்? தாங்கள் விரித்த வலையில் அகப்பட்டு.....''

''என்ன, ஐயா, சொல்கிறீர்? என்னை வலைஞர் குலப்பெண் என்று சொல்கிறீரா? இது பழுவூர் அரசர் காதில் விழுந்தால்......''

''அதைப் பற்றி நான் கவலைப்படவில்லை, தேவி! ஆனால் மீன் பிடிக்கும் வலையை நான் குறிப்பிடவும் இல்லை. தங்களுடைய சேல் விழிகள் விரிக்கும் மோக வலையைச் சொல்கிறேன்....''

''சீச்சீ! என்ன தைரியம் உமக்கு? வலைஞர் குலப் பெண் என்றாலும் பாதகமில்லை. ஆடவர்களுக்கு மோக வலை விரிக்கும் கணிகை என்று என்னைச் சொல்லுகிறீர்?''

''மன்னிக்க வேண்டும்! அப்படிப்பட்ட அபராதத்தையும் நான் செய்யவில்லை. தாங்கள் வேண்டும் என்று வலை விரிக்க வேண்டுமா, என்ன? சிலந்திப் பூச்சி வலை நெய்வது ஈக்களைப் பிடிப்பதற்காகவா? அது தான் வசிப்பதற்காக வலை பின்னுகிறது. ஈக்கள் தாமாகப் போய் அவ்வலையில் விழுகின்றன.....''

''என்னைச் சிலந்திப் பூச்சி என்று சொல்கிறீர்? அவ்வளவு பயங்கரமாக இருக்கிறேனா நான்?''

''தவறு! தவறு! நான் தீபத்தைச் சொல்லியிருக்க வேண்டும். தீபம் எரிவது விட்டில் பூச்சிகளுக்காக அல்ல. தீபம் எரிந்து தன்னைச் சுற்றிலும் ஒளி வீசி ஜோதி மயமாகச் செய்கிறது. அசட்டு விட்டில் பூச்சிகள் அதைக் கனி என்று நினைத்துக் கொண்டு சென்று விழுந்து மாய்கின்றன....''

''ஒரு சிறிய காற்று குப் என்று அடித்தால் தீபம் அணைந்து விடுகிறது. வாயினால் ஊதிக்கூட அணைத்து விடலாம். தீபத்தின் சக்தி அவ்வளவு தான்!''

''தீபம் அணைந்துவிடும்; ஆனால் பூரண சந்திரனை யார் அணைக்க முடியும்? பூரண சந்திரன் சமுத்திர ராஜ

னுக்காக உதயமாகவில்லை. இயற்கை நியதியின்படி சந்திரன் உதயமாகிறது. அதன் குளிர்ந்த நிலா ஒளியை வானமும் பூமியும் மகிழும்படி பரப்புகிறது. ஆனால் பேதைக் கடலைப் பாருங்கள்! பூரண சந்திரனைக் கண்டு கடல் எதற்காக அப்படிக் கொந்தளிக்க வேண்டும்? எட்டாத பழத்துக்கு ஏன் கொட்டாவி விட்டுத் தவிக்க வேண்டும்?''

''பல்லவ குல மன்னர்களின் கவிதா ரசனையைப் பற்றியும் கற்பனைத் திறனைப் பற்றியும் ரொம்பவும் கேள்விப்பட்டிருக்கிறேன். அவையெல்லாம் உண்மையென்பதாக இப்போதுதான் உணர்கிறேன்.''

''புராணங்களிலும் காவியங்களிலும் நான் படித்ததையும் கேட்டதையும் நேற்று வரை நம்பவில்லை; இன்றைக்குத்தான் எனக்கு நம்பிக்கை பிறக்கிறது.''

''எதைப் பற்றிச் சொல்கிறீர்?''

''பெண் உருவங் கொண்டவர்கள் சிலர் வானத்தையும் பூமியையும் தங்கள் காலடியில் போட்டுக் கொள்ளும் சக்தி பெற்றவர்கள் என்று கேட்டிருக்கிறேன். பாற்கடலைக் கடைந்து அமுதம் எடுத்த அசுரர்கள் அமுதபானம் செய்ய வேண்டிய சமயத்தில் மோகினியினால் ஏமாந்து போனார்கள். சுந்தோபசுந்தர்கள் ஒரு பெண் நிமித்தமாக அடித்துக் கொண்டு செத்தார்கள். மேனகையினால் விசுவாமித்திரர் தவம் கெட்டது. கோவலன் மாதவியின் மோக வலையில் விழுந்து கிடந்தான். தசரதர் கைகேசிக்காக இராமனைக் காட்டுக்கு அனுப்பினார். எகிப்து நாட்டு ராணியின் காரணமாக மகத்தான ரோம சாம்ராஜ்யம் அழியத் தொடங்கியது.....''

''போதும், ஐயா! போதும்! இந்த உதாரணங்களையெல்லாம் எதற்காகச் சொல்கிறீர்?''

''தெரியவில்லையா, தேவி! யாருக்கு உதாரணமாகச் சொல்கிறேன் என்று தெரியவில்லையா?''

''எனக்கு உதாரணமாகச் சொல்கிறதாயிருந்தால், அதைப் போல் பெரிய தவறு நீர் வேறு செய்ய முடியாது.''

''தவறு ஒன்றுமில்லை. அவர்களுடைய சக்தியைக் காட்டிலும் தங்கள் சக்தி குறைந்தது அன்று.''

''உம்முடைய வாய் மொழியே உமக்கு விரோதமாயிருக்கிறது.''

''எப்படி, தேவி!''

''பழுவூர் அரசரை நான் வேண்டுமென்றுதான் கப்பலுக்கு அனுப்பினேன். உம்முடன் ஒரு விஷயத்தைப் பற்றிக் கேட்பதற்காக.''

''தங்கள் நோக்கத்தைத் தெரிந்து கொண்டுதான் நானும் அவருடன் போகாமல் இங்கேயே தங்கினேன்.''

''வீர பாண்டியனை ஒரு பெண் காப்பாற்ற முயன்றாள் என்றும் ஆதித்த கரிகாலர் அதைப் பொருட்படுத்தவில்லையென்றும் நீர் சொன்னீர் அல்லவா?''

''ஆம், சொன்னேன்.''

''காப்பாற்ற முயன்ற பேதைப் பெண் யார் என்று தெரியுமா?''

''இப்போது பழுவூர் அரண்மனையின் ஜோதியாக விளங்கும் இளைய ராணி நந்தினி தேவிதான்.''

''நீர் சற்று முன் வர்ணித்தபடி எனக்கு அவ்வளவு சக்தி இருந்திருந்



தால் நான் காப்பாற்ற விரும்பிய ஒரு மனிதரின் உயிரைக் காப்பாற்றியிருக்க மாட்டேனா? அது ஏன் என்னால் முடியாமற் போயிற்று?''

''இரத்த வெறி கொண்டிருந்த ஆதித்த கரிகாலர் அச்சமயம் தங்கள் விருப்பத்தை நிறைவேற்றி வைக்கவில்லைதான். ஆனால் அதற்குப் பிறகு மூன்று வருஷமாக அவர் எத்தகைய சித்திரவதை அனுபவித்து வருகிறார் என்பதை நான் அறிவேன்.''

''உமக்கு எப்படித் தெரியும், ஐயா! உம்மிடம் சொன்னாரா?''

''மூன்று வருஷமாய் மனத்திலேயே வைத்துக் கொண்டு கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார். அவருடைய உள்ளத்தை ஏதோ ஒரு துன்பம் அரித்துக் கொண்டிருக்கிறது என்பதை மட்டும் அறிந்திருந்தேன். பத்து நாளைக்கு முன்பு, நான் ஈழத்துக்குப் புறப்பட்டதற்கு முதல் நாள்தான் — மனத்தைத் திறந்து என்னிடம் சொன்னார். அது முதல்......''

''அதுமுதல் என்ன?''

''பழுவூர் இளையராணியைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை என் மனத்திலும் குடிகொண்டு விட்டது.''

''ஆதித்த கரிகாலரின் நிலையில் நீர் இருந்திருந்தால் நான் கேட்டுக் கொண்டதற்காக வீர பாண்டியரை உயிரோடு விட்டிருப்பீர் என்று சொன்னது நினைவிருக்கிறதா?''

''நன்றாக நினைவிருக்கிறது.''

''அது உண்மைதானா?''

''சத்தியம் தேவி! தாங்கள் சோதித்துப் பார்க்கலாம்.''

''ஐயா! என் மனத்தில் ஒரு சந்தேகம் இருக்கிறது. அதைச் சொல்லட்டுமா?''

''தங்கள் தங்கக் குரலில் எதைச் சொன்னாலும் என் செவிகள் இன்பம் அடையும்; உள்ளம் பூரிக்கும்.''

''நீர் என்னைச் சோதிப்பதற்காகவே இப்படிப் பேசுகிறீர் என்று சந்தேகிக்கிறேன். நான் விரிக்கும் மோக வலையைப் பற்றிப் பேசி நீர் எனக்கு வலை விரிக்கப் பார்க்கிறீர். என்னுடைய அந்தரங்கத்தை அறிந்து கொள்ள முயல்கிறீர்.''

பார்த்திபேந்திரன் திடுக்கிட்டுப் போனான். ஆரம்பத்தில் அவன் பேச ஆரம்பித்த போது அந்த எண்ணத்தோடு தான் ஆரம்பித்தான். பிறகு அதை மறந்தே விட்டான். கபடமாக ஆரம்பித்த பேச்சு அவனை மோகக் கடலில் உண்மையாகவே தள்ளி விட்டது. முதலில் அப்படி எண்ணியது குறித்து அவன் வெட்கப்பட்டான். அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல், ''தேவி! அவ்விதம் தங்களைச் சோதித்து ஒற்றன் வேலை செய்ய நான் பிரயத்தனப்படும் பட்சத்தில் என் தலையில் இடி விழட்டும்!'' என்றான்.

''ஐயோ! அப்படிச் சொல்லாதீர்!'' என்று நந்தினி அலறினாள்.

''ஏன், தேவி! ஏன்?''

''உங்கள் பெரிய இளவரசரிடமிருந்து வந்தவன் இன்னொருவன் — அவன் பெயர் என்ன.....''

''வந்தியத்தேவனா?''

''ஆம், அவன்தான்! என்னிடம் மிகத் தந்திரமாக ஒற்று அறிந்து போக முயன்றான். தாங்கள் சொல்வதைப் பார்த்தால் அவன் தலையில் இடி விழுந்தே விட்டது போலிருக்கிறதே!''

''துரதிர்ஷ்ட வசமாக அவன் தலையில் இடி விழவில்லையே! அவன் நின்ற கப்பலில் அல்லவா விழுந்தது! அதனால் அவனுக்கு வந்த ஆபத்து சின்ன இளவரசரையும் அல்லவா பிடித்து விட்டது?''

''பாவம்! பழையாறை இளைய பிராட்டியை நினைத்தால் எனக்குப் பரிதாபமாயிருக்கிறது. அவள் இந்த உலகில் மிகவும் பிரியம் வைத்திருந்த இருவர் ஏக காலத்தில் மாண்டு போனார்கள்! என்ன துரதிர்ஷ்டம்!''

''தேவி! இரண்டு பேர்கள் யார்?''

''நீர் சொன்ன இரண்டு பேருந்தான்! இளையபிராட்டிக்குத் தம்பியின் மீது தனி வாஞ்சை உண்டு அல்லவா?''

''அது உலகம் அறிந்தது. அவளுடைய பிரியத்துக்குப் பாத்திரமான இன்னொருவர்...?''

''ஏன்? உங்கள் பெரிய இளவரசர் அனுப்பிய தூதன்தான்.''

''வந்தியத்தேவனையா சொல்லுகிறீர்கள்?''

''அவனைத்தான்!''

''சீச்சீ! சோழ சாம்ராஜ்யத்தையே ஆட்டுவிக்கும் சக்தி வாய்ந்த பழை



## அருள்வாக்கு

பகவானிடம் நாம் செல்வம், ஆரோக்கியம், புகழ் இப்படி எது எதையோ வேண்டுகிறோம். உண்மையில் மனமானது கண்டபடி அலையாமல் அதைக் கட்டுப்படுத்துவதற்குத்தான் ஸ்வாமியின் அருளை நாம் கோர வேண்டும். மனம் அவசியமற்றவைகளை யெல்லாம் செய்யத் தூண்டும். கண்ணால் காணக் கூடாதவைகளைக் கண் பார்க்கிறது. காதால் கேட்கக் கூடாதவற்றைக் காது கேட்கிறது. நாக்கினால் ருசிக்கக் கூடாதவைகளை நாக்கு ருசிக்கத் துடிக்கிறது. இதற்கெல்லாம் காரணம் மனம் பல பொருட்களைக் கண்டு மயங்குவதுதான். இதற்கெல்லாம் மேலான அழகான பொருள் கிடைத்துவிட்டால் மனமானது இவற்றை விட்டு விட்டு அந்த ஓர் அழகு வஸ்துவையே பற்றிக் கொண்டு இருந்திவிடும். ஒரு குழந்தைக்குப் பொரி உருண்டையின் மேல் மிகவும் பிரியம். ஆனால் லாடு கிடைத்தால், அதே குழந்தை பொரி உருண்டையைத் தூக்கி எறிந்துவிட்டு லாடுவை எடுத்துக் கொள்கிறது. அதுபோல் மற்ற எல்லாவற்றையும் விட அழகான பொருள் கிடைத்தால் மனம் அதில் மயங்கிக் கட்டுண்டு கிடக்கும். அப்பேர்ப்பட்ட அனைத்திலும் அழகிய வஸ்து ஈசுவரனே.

பகவானிடம் புதிதாக ஒன்றும் நாம் கேட்டுப் பெறவேண்டியதில்லை. நம்மிடம் இல்லாமல் அவனிடம் உள்ள ஏதோ ஒன்றைக் கேட்க வேண்டியதில்லை. நம்மிடமே இருக்கும் படியான நம் உண்மை ஸ்வரூபத்தை நாம் அறியவில்லை. நம்முடைய உண்மை ஸ்வரூபம் ஆனந்த மயமானது. பகவானேதான் அது. பரமாத்மாவேதான் அது. அப்படிப்பட்ட நம் நிஜ ஸ்வரூபத்தை மனத்தால் மறைத்துக் கொண்டு ஓயாமல் துக்கப்படுகிறோம். "என் உண்மை நிலையை உணர அருள்வாயாக. என்னை நான் அறிய முடியாதபடி இந்த மனசு ஆட்டிப் படைக்கிறது. இதை அன்பினாலே கட்டி, கட்டுப்படுத்தி என்னிடம் கொடுத்தால் போதும். என் ஸ்வரூபத்தையே நான் காண முடியாமல் கெடுக்கும் இந்தக் கெட்ட மனப்போக்கை நீ எடுத்துப் போ. என் ஸ்வரூபத்தையே எனக்களித்து அதைக் காக்க வேண்டிய காவலன் நீ" என்று பிரார்த்திப்போம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சாரிய சுவாமிகள்.

---

யாரை இளையபிராட்டி அற்பனும், தற்பெருமைக்காரனும், அதிகப்பிரசங்கியுமான அந்த வாலிபன் மீது...."

"ஆம்; அந்தவாலிபன்மீதுமோகம் கொண்டாள். அதனாலேதான் அவனைப் பழுவேட்டரையரின் தண்டனையிலிருந்து தப்புவிப்பதற்காக ஓலை கொடுத்து இலங்கைக்கு அனுப்பினாள். பாவம்! இந்தக்கிழவர் இளவரசரின் துர்க்கதிக்குத் தாம் காரணம் என்று துடியாய்த் துடிக்கிறார். உண்மையில் அதற்கு இளைய பிராட்டிதான் காரணம். அவள் மட்டும் ஓலை கொடுத்து அனுப்பாதிருந்தால்....."

"உண்மை, உண்மை! இந்த விபரீதம் எல்லாம் ஏற்பட்டிராது."

"என் கணவர் கப்பலிலிருந்து திரும்பி வந்ததும் இந்த உண்மையை அவருக்கு நீர் எடுத்துச் சொல்ல வேண்டும். சொன்னால், என்னுடைய நன்றிக்குப் பாத்திரம் ஆவீர்!"

"அம்மணி! தங்களுடைய நன்றிக்குப் பாத்திரம் ஆக இது ஒன்றுதானா வழி? வேறு எனக்குத் தாங்கள் இடக்கூடிய பணிகள் இல்லையா?"

"ஐயா! ஒரு பேதைப் பெண்ணின் நன்றிக்குப் பாத்திரமாக எத்தனையோ நூறு வழிகள் உண்டு."

"அவற்றில் இன்னும் இரண்டொன்றைச் சொல்லுங்கள். ஆதித்த கரிகாலருக்கு அப்படிப்பட்ட சந்தர்ப்பம் ஒன்று கிடைத்தது. அதை அவர் கைசோர விட்டு விட்டார். விட்டு விட்டு அப்புறம் இரவு பகலாகத் துடிதுடிக்கிறார். நான் அத்தகைய தவறைச் செய்ய மாட்டேன்!"

"இது சத்தியமா, ஐயா? ஒருபெண்ணின் விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக நீங்கள் எது சொன்னாலும் செய்வீர்களா?"

"எந்தப்பெண்என்பதைப்பொறுத்தது, தேவி! நேற்று வரைக்கும் நான் பார்த்திருக்கும் எந்தப் பெண்ணின் விருப்பத்துக்காகவும் எதுவும் செய்திருக்க மாட்டேன்; சொன்னால் சிரித்திருப்பேன். இன்று அப்படியல்ல. தாங்கள் சொல்லிப் பாருங்கள். எனக்கு நூறு உயிர்கள் இருந்தால் அவ்வளவையும் தங்களுடைய விருப்பத்தை நிறைவேற்றுவதற்கு அர்ப்ப

ணம் செய்வேன். ஆயிரம் சாம்ராஜ்யங்கள் என் வசம் இருந்தால் அவ்வளவையும் தங்கள் விருப்பத்திற்காகத் தியாகம் செய்வேன். இகத்தையும் பரத்தையும் என்றென்றைக்கும் இழக்கும் படி சொன்னால் அதற்கும் சித்தமாயிருப்பேன். கொடிய பகைவர்களை மன்னிக்கச் சொன்னால் மன்னிப்பேன். அத்தியந்த நண்பர்களின் தலையைக் கொண்டு வந்து தங்கள் காலடியில் போடச் சொன்னால், போட்டு விட்டு மறுகாரியம் பார்ப்பேன்...!''

இவ்விதம் பார்த்திபேந்திரன் வெறி கொண்டவனைப் போல் கூறியபோது அவனுடைய உடம்பு தலையிலிருந்து கால் வரையில் நடுநடுங்கியது; அவனுடைய வாயிலிருந்து வந்த சொற்கள் குழறின; உதடுகள் துடித்தன; பற்கள் கடித்தன; ரோமங்கள் குத்திட்டு நின்றன; மூச்சு விடும் சப்தம் கொல்லன் உலைச் சப்தத்தைப் போலக் கேட்டது.

பார்த்திபேந்திரனுடைய இந்த மாறுதல் நேயர்களுக்கு வியப்பை அளிக்கும். ஏன்! அவனிடமே ''நீ இப்படி ஆவாய்!'' என்று முதல் நாள் யாராவது சொல்லியிருந்தால், அவன் நம்பியிருக்க மாட்டான். பிற்காலத்தில் நினைத்துப் பார்த்தால் அவனுக்கே கூட வியப்பளிக்கக்கூடிய காரியந்தான்.

ஆனால் இது பார்த்திபேந்திரனைப் பற்றிய அதிசயம் அல்ல; மனித இயற்கை பற்றிய இரகசியம்.

எத்தனையோ மேதாவிகள் காலமெல்லாம் ஆராய்ச்சி செய்த பின்னரும் மனித உடம்பின் அமைப்பு இரகசியத்தை நம்மால் முழுதும் அறிந்து கொள்ள முடியவில்லை. மனித இதயத்தின் அமைப்பு இரகசியத்தை எவ்வாறு அறிந்து கொள்ள முடியும்?

வாழ்நாளெல்லாம் பழிபாவங்களில் முழுகிக் கிடந்தவர்கள் திடீரென்று ஒருநாள் வைராக்கிய சீலர்களாகிறார்கள்; பக்தி பரவசமடைந்து ஆடிப் பாடுகிறார்கள்; இறைவன் கருணைக்குப் பாத்திரமாகிறார்கள்; மனித சமூகத்துக்கு ஒப்பற்ற தொண்டுகளும் புரிகிறார்கள்.

இதற்கு மாறாக, நெடுங்காலமாய்த் தூய்மையான களங்கமற்ற வாழ்க்கை நடத்தியவர்கள் திடீரென்று ஒருநாள் வழுக்கி விழுகிறார்கள்; அப்படி விழும் போது அதல பாதாளத்திலேயே விழுந்து விடுகிறார்கள்.

பார்த்திபேந்திரனுடைய ஆவேச மொழிகளைக் கேட்டு வந்த நந்தினி, ''போதும், ஐயா, போதும்! நிறுத்துங்கள்! அவ்வளவு பயங்கரமான காரியம் எதையும் செய்யும்படி தங்களை ஒருநாளும் நான் வற்புறுத்தப் போவதில்லை. தங்களுக்கும் எனக்கும் உகந்த சந்தோஷமான காரியத்தைத்தான் சொல்லப் போகிறேன்'' என்றாள்.

(தொடரும்)



துடியான வாழ்வுக்கு ஒப்பில்லாத் துணை
ஸ்டேஃப்ரீ பெல்ட்லஸ் ஸானிட்டரி நேப்கின்கள்.
பெல்ட்டு, கயிறு, கச்சு, ஊக்கு, ஊசி எதுவுமே
வேண்டாம். ஈரமுறிஞ்சுவதில் இணையற்றது
ஸ்டேஃப்ரீ. உலர்நிலை மாறாத சுகம் எந்த
நேரமும் எனதே. மாதம் எந்த நாளிலும் சுக
மாகவமுடன் இருக்க முடிகிறது என்றால்!

பலத்த திரவப் போக்கு உள்ள நாட்களிலேயோ
நம்பிக்கையோடு நான் உபயோகிப்பது
ஸ்டேஃப்ரீ ஸுப்பர்; காரணம் அது அளவிற்
பெரிதாக இருப்பதால் கூடுதலான பாதுகாப்பு
பத்திரமான உறுதியோடு கிடைக்கிறது எனக்கு.
இப்போது, ஸ்டேஃப்ரீ டியோடரண்ட் டும்
உள்ளதே. ஸ்டேஃப்ரீ டியோடரண்ட் ஸேனிட்டரி
நேப்கின்கள் மாதவிடாயின் வாடையைக்
குறைக்க உறுதுணையாக உள்ளது. ஆகவே
நான் புத்துணர்வுடன் நிலைபெறுவதோடு,
மனம்போல் எதையும் செய்கிறேன்
தன்னம்பிக்கையுடனே.

எனவேதான், நான் ஸ்டேஃப்ரீ
உபயோகிக்கிறேன். என்னை நாளுக வாழ
வைக்கிறது.இது ஓர் அரும்பேறுதானே!

ஸ்டேஃப்ரீ* பாதுகாப்புத் திட்டம்

**ரெகுலர்** — முழுப் பாதுகாப்பு.
பத்திரமான காப்புறுதி.

**ஸுப்பர்** — பலத்த திரவப் போக்கின் போதும்.
இரவு முழுமைக்கும் உபயோகிக்கவும்
கூடுதலான பாதுகாப்பு.

**டியோடரண்ட்** — முழுமொத்தப் பாதுகாப்புடனே
வாடை நீக்கிய புத்துணர்வு.

**உரித்தெடுத்து ஒட்டினால்
போதும்**

நேப்கினின் மூன்று-படல பசைப்
பட்டிகளை, மிக இறுகலான
ஜட்டியோடு அழுந்த
ஒட்டிவிடுங்கள். அது நகராது.
நழுவாது. உரியாது. சரியாது.




OBM 2527 TAM

# ஸ்டேஃப்ரீ*... என்றும் போல் நீங்கள் ஓர் சுதந்திரக் சிட்டு.

*ஸ்டேஃப்ரீ என்பது ஜான்ஸன் & ஜான்ஸன் யு.எஸ்.ஏ.
டிரேடு மார்க் ஆகும்.

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்

அந்தச் சொப்பனம் கலைய... அருண் விழித்துக் கொண்டான்... இருட்டில் கைகள் அம்மாவைத் தேட... அலைய...

'மெத்'தென்று குளிர்ச்சியான அம்மாவுக்குப் பதில், முண்டும் முடிச்சுமாக ஒரு கை... விரல்கள்... சட்டென்று எழுந்து உட்கார்ந்து பார்த்தான்... அம்மா இல்லை... பாட்டி...! பாட்டிதான்...! சந்தேகமில்லை... இருட்டை வெறித்துப் பார்த்தபடி இருந்தான்... பயந்தான்... அம்மாவைக் கூப்பிட வாயெடுத்தான்... "அம்..." உடன், அப்பா சொன்னது நினைவில் வந்தது...

"ரம்யா... இவனை யாருன்னு நினைச்சே... என் பிள்ளை...! தனியாப் படுத்துக்கப் பயப்படுவானா...? என் பிள்ளையா...? ஹ... இல்லியா அருண்...? நீ கோளா... பயப்பட...? ஆண் பிள்ளை...! தைரியமா இருக்கணும்...

இந்த ஏற்பாடு வேண்டாம் — கூடாது... உடனடியாக ஆட்சேபணை அம்மாவிடமிருந்து வரும் என்று இவன் எதிர்பார்த்தான்... 'எப்பொழுதும் போல் அவன் என்னுடன் தூங்கட்டும்... பரவாயில்லை...' இப்படி ஏதாவது சிபாரிசு செய்வாள் என்று நினைத்தான்... ஆனால்... அம்மா... ஒரு தடவை அப்பாவைப் பார்த்துச் சிரித்ததோடு சரி... அந்தச் சிரிப்பில் அம்மா இன்னும்... இன்னும் அழகாக... சிவப்பாக... வெட்கமாக...

"போன முறை பார்த்ததற்கு இப்ப எத்தனை பெரியவனாயிட்டான்... ஏ அப்பா...! நன்னா உசந்துட்டான்... ரம்யா... ஒண்ணு தெரியுமா? 'துபாய்'லே குழந்தைகள் பிறந்ததும் அதற்கு உடனே ஒரு தனிக் கட்டில்... தனி ரூம்னு, தனியாவே வாழப் பழக்கிடுறாங்க... இங்கேதான்... ம்... இவன் யு.கே.ஜி. படிக்கிறான்... இன்னும் உன் புடைவைத் தலைப்பை விடாம...

"இவன் தனியா இல்லியே... துணைக்குப் பாட்டி இருக்காளே... இல்லியா அருண்...?"

அம்மாவையே பார்த்தபடி இருந்தான்... ஏமாற்றமாக இருந்தது. ஒரேயடியாக அம்மா இப்படி மாறிவிடுவாள் என்று எதிர்பார்க்கவில்லை. ஒருநாளில் இத்தனை தலைகீழ் மாற்றம் வரமுடியுமா...? ச்சு... எல்லாம் இந்த அப்பா வந்த பிறகுதான்... அப்பா எங்கேயோ துபாயில் வேலையாக இருக்கிறாராம்... நினைவு தெரிந்து இப்பொழுது தான் அவரைப் பார்க்கிற மாதிரி இருக்கிறது... நேற்றுதான் வந்தார்... பெட்டி நிறையப் புடைவைகள்... பொம்மை... டேப் ரிகார்டர்... இன்னும் என்னென்னவோ... வந்ததும் ஒரு நிமிடம் இவனை மடியில் தூக்கி வைத்துக் கொண்டார். அதன் பிறகு அம்மாவையே விடாமல் சுற்றிச் சுற்றி... இந்த அம்மாவுக்கும் தலைகால் புரியவில்லை... எப்பப்பாரு அப்பாவிடம் இளித்து — இளித்துக் கொண்டு நிற்கிறாள்...

எப்படி இருந்த அம்மா...? 'அருண்... அருண்...' என்று ஒரு நாளைக்கு நூறு தடவை கூப்பிடுகிற அம்மா... ஸ்கூலிலிருந்து வரக் கொஞ்சம் லேட்டாகி விட்டால் அம்மாவை வாசலில் பார்க்கலாம்... 'எத்தனை கவலைப் பட்டுட்டேன்...' என்று கண்களில் பயத்துடன் நிற்கிற அம்மா... கூடவே உட்கார்ந்து 'ஹோம் — ஒர்க்' சொல்லிக் கொடுக்கிற அம்மா... 'சாப்பிடுடா கண்ணு' என்று இன்னும் இரண்டு பிடி வாயில் போடுகிற அம்மா... இரவில் கதை சொல்லுகிற அம்மா... இன்னும்... தலைவாரி விடுகிற... யூனிபார்ம் போட்டுவிடுகிற... ஒவ்வொன்றையும் பார்த்துப் பார்த்துச் செய்கிற அம்மா...

அதே அம்மாதானா...?

இப்பொழுதெல்லாம் அநேகமாக அம்மா வீட்டில் இருப்பதில்லை... இவனை எதிர்பார்த்து வாசற்படியில் நிற்பதில்லை... இவன்தான் அம்மா வருகிறாளா — வருகிறாளா என்று எதிர்பார்த்துக் கிடக்கிறான்... தினமும் அப்பாவுடன் எங்கேயாவது ஊர் சுற்றக் கிளம்பிவிடுகிறாள்... வரும்போது வெகுநேரமாகிவிடும்... இருந்தும்...? 'சாப்பிட்டாயா...? ஹோம் — ஒர்க் செய்தாயா...? டி. வி. யில் 'மால்குடி டேஸ்' பார்த்தாயா...?' எதுவும் இப்பொழுது விசாரிப்பதில்லை. கவலைப்படுவதில்லை... எல்லா உபசாரமும் — விசாரிப்பும் அப்பாவுக்குத்தான்... ச்சு...! இவன் இடத்தைச் சுலபமாக அப்பா ஆக்கிரமித்துக் கொண்டு விட...

முதல் நாள் இவன் தூங்கியதும், அம்மா கொண்டு போய் அடுத்த அறையில் பாட்டியுடன் போட்டு விட்டாள் போலிருக்கிறது... எழுந்ததும், இவனுக்குக் கோபமாக வந்தது... அடுத்த நாள் கொஞ்சம் அடம் பிடித்துப் பார்த்தான்... ஆனால், அப்பா நைஸாகப் பேசி அனுப்பி விட்டார்.

'நீ என்ன 'கோளா?' ஆண் பிள்ளை... தைரியம் வேண்டும் என்கிறாரே...? அப்பாவுக்கு எத்தனை வயசு! பெரியவர்... அவருக்குத் தைரியம் இல்லையா...? பயமா...? ராத்திரியில் எதற்காகத் துணை...? தனியாக ஏன் இவர் ஓர் அறையில் தூங்கக் கூடாது...' — சரியான பயந்தாங்கொள்ளி அப்பா...'

இதைப் பாட்டியிடம் சொன்னான்... அம்மாவிடமும் சொன்னான்... அம்மா பதில் சொல்லவில்லை... சிரித்தாள். இப்பொழுது எதற்கெடுத்தாலும் சிரிக்கிறாள்... காரணமில்லாத சிரிப்பு... இப்படியா சிரிக்கும்? சரியான பைத்தியம்...

இந்த அப்பாவை எனக்குப் பிடிக்கவில்லை.

# மாதம் ஒரு மாவட்டம்




**மீண்டும் வ. உ. சி. நீலகிரி மாவட்டங்களுக்கு வருகிறோம்!**

கடந்த ஆண்டு அக்டோபர், நவம்பர் மாதக் கல்கி இதழ்களில் வ. உ. சி., மற்றும் நீலகிரி மாவட்டப் பிரச்னைகள் பற்றி விரிவாக எழுதியிருந்தோம். கூடவே அந்தந்த மாவட்டக் கலெக்டர் பேட்டியையும் விரிவாக வெளியிட்டிருந்தோம்.

இப்போது அந்தப் பிரச்னைகளெல்லாம் எந்த அளவுக்குத் தீர்க்கப்பட்டிருக்கின்றன? அல்லது இன்னும் தீர்வு காணப் படாமல் உள்ளன? தீர்வு காணப்பட்டவற்றையும் எழுதுங்கள்; தீர்வு காணாதவற்றையும் எழுதுங்கள்.

மீண்டும் நமது நிருபர்கள் வரும் மே மாதத்தில் இந்த இரண்டு மாவட்டங்களிலும் ரீ—விசிட் செய்ய வருகிறார்கள்.

**கடிதங்கள் வந்து சேர வேண்டிய கடைசித் தேதி: 20.4.88.**

உடனடியாக எழுதியனுப்புங்கள்.

— ஆசிரியர்.

ஹோட்டலுக்கு அழைத்துப் போகிறார்... ஐஸ்கிரீம் வாங்கித் தருகிறார்... இருந்தும்... மந்திரக்கோலால் மயக்குகிற மாதிரி, அம்மாவை ஒரு நொடியில் என்னிடமிருந்து பிரித்து விட்டாரே...? சே...! இந்த அப்பா திரும்பித் துபாய்க்குப் போக மாட்டாரா...? எப்பொழுது புறப்படுவார்...? காலெண்டர் கண்களில் பட்டது... இன்னும் பத்து நாட்கள்... எட்டு நாட்கள்... இரண்டு நாட்கள்... நாளை...

**கா**லையிலிருந்தே அம்மா சரியில்லை... அடிக்கடி கண் கலங்கினாள்.

"இங்கே ஒருநாள் போறது யுகமா இருக்கு...! இன்னும் எத்தனை நாளைக்கு உங்களை விட்டுட்டுத் தனியா...?"

அப்பாவும் வருத்தமாக இருந்தார்.

"இதோ பாரு...! ரம்யா...! இன்னும் மூணே வருஷங்கள்... முப்பத்தாறு மாசம்... வந்து குதிச்சுடப் போறேன்... அசடு... நானும் அங்கே — 'சனிக்கிழமை வந்துதா, ஞாயிற்றுக்கிழமை வந்துதா'ன்னு ஒவ்வொரு நாளா பிடிச்சுத் தள்ளிண்டுதான் இருப்பேன்... இப்ப சம்பாதிச்சால்தான் உண்டு... எனக்கு மட்டும் உன்னை விட்டுப் பிரிய மனசு..."

அதற்குள் டாக்ஸி வந்துவிட்டது.

விமான நிலையம் போகும் வரை — வந்த பிறகும் அம்மா அழுகையை அடக்க மிகவும் பிரயாசைப்பட்டுக் கொண்டிருந்தாள்...!

இதோ அழப் போகிறாள் — இப்பொழுது அழுது விடுவாள்... — பலூன் வெடிக்கிற மாதிரி எந்த நிமிடமும் அவள் பெரிதாக அழுது விடலாம் என்று இவன் எதிர்பார்த்தான்.

உள்ளே நுழைந்து, கண்ணாடிக் கதவுகள் பிரிக்கும் வரை அம்மாவுடன் அப்பா பேசிக் கொண்டே இருந்தார்... 'கவலைப் படாதே...' என்றார். சட்டென்று அவர் கண்களும் கலங்க... கலங்க... திடீரென்று அம்மாவை லேசாக அணைத்துக் கொண்டார்.

இவனைத் தூக்கி முத்தம் கொடுத்தார்.

விமானத்தில் ஏறியது அவர்தான் கடைசியாக இருக்கும்... ஓடிப் போய் ஏறினார். படிகளில் நின்றபடி கையை ஆட்டினார்.

விமானம் தரையில் ஓடி, மேலே பறந்து போய்ப் புள்ளியாகியது. அதுவரை அம்மாவும் சிலையாக நின்றிருந்தாள்.

திரும்பும்போது, "அப்பா ஊருக்குப் போயிட்டார்டா..." என்று இவன் கழுத்தைக் கட்டிக் கொண்டு அழுதாள்.

இவன் ஓர் உணர்ச்சியும் இல்லாமல் இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தான்.

**வீ**டு வந்ததும், 'தலை வலிக்கிறது' என்று போய்ப் படுத்துக் கொண்டு விட்டாள்... இரவு வரை அப்படியே கிடந்தாள்... பிறகு, மெல்ல எழுந்து வந்தாள்.

# அதிக சக்தி, அதிக போஷாக்கு,

## அதிக சாக்கலேட் சுவை...



### அருந்துங்கள்

### கேம்ப்கோ

# வின்னர்




இது ஒரு சுவை மிகுந்த மாறுபட்ட சாக்கலேட் பானம். அதிக சக்தியை அளிப்பதற்காக குளுக்கோஸ் நிறைந்தது. போஷாக்கினை அளித்திட வைட்டமின்கள் மற்றும் தாதுச் சத்துக்களைக் கொண்டது.

மேலும் குழந்தைகள் மிகவும் விரும்பிடும், இதுவரைக் கிடைத்திராத அதிக சாக்கலேட் சுவை.

அருந்திப் பாருங்கள். இதைவிடச் சிறந்ததொரு சுவை மற்றும் சக்திமிக்க சாக்கலேட் பானம் இல்லை என்பதைக் கண்டுகொள்வீர்கள்.

**இந்தியாவின் மிகப்பெரிய அதிநவீன ஆலை அளிப்பது.**

கேம்ப்கோ லிமிடெட்
மங்களூர்.

R K SWAMY/CL/5828

இத்தனை நாட்கள், உற்சாகமும் — அலங்காரமுமாக வளைய வந்து கொண்டிருந்தவள், திடீரென்று மங்கிப் போன பொம்மை மாதிரி மாறியிருந்தாள்...

சாதத்தைப் பிசைந்து எடுத்தபடி இவனிடம் வந்தாள்.

''வாயைத் திற... சாப்பிடு...''

''டைனிங் டேபிள் மேலே வை... நானே சாப்பிடறேன்... இத்தனை நாளா சாப்பிடலே?''

இவன் கோபத்தைக் கண்டு அவளுக்குச் சிரிப்பு வந்த மாதிரி இருந்தது.

''அருண்... கண்ணு இல்லியா... சாப்பிடு...'' கையை வாயருகே கொண்டு வந்தாள்.

இவனுக்குக் கோபம் கோபமாக வந்தது... ஆனால்... நெய் மணக்க மணக்கச் சாதம் வரும்போது வேண்டாம் என்று சொல்ல மனம் வரவில்லை... முகத்தை முடிந்தவரை கோபமாக வைத்துக் கொண்டான்.

''...இந்த ஒரு பிடியோட போதும்...'' என்றான் விறைப்பாக... இன்னொரு பிடிக்கும் இப்படியே... இன்னொரு பிடி... மெல்ல மெல்லத் தட்டு காலி...

சாப்பாடு ஆனதும் நேரே பாட்டியின் அறையில் போய்ப் படுத்தான்... தலையோடு கால் போர்த்திக் கொண்டான்.

அம்மா இவனைத் தேடுவது தெரிந்தது...

''.... அருண்... அருண்... தூங்கிப் போயிட்டியா...?''

இவன் தூங்குகிற மாதிரி கிடந்தான்.

''... நிஜமா தூங்கினால் வலது கால் ஆடணுமே....!''

இவனை அறியாமல் கால் ஆடியது.

''... அருண்... நீ தூங்கல்லே... எழுந்திரு.. எழுந்து என் கூட வா....''

''... நான் இங்கேதான் தூங்கப் போறேன்...''

''... ஏன்....?''

''... நான் யு.கே.ஜி. படிக்கிறேன்... ஆண் பிள்ளை... இம் நாட் எ கேர்ள்...''

''... அருணுக்குப் புதுசா ஒரு கதை இன்னிக்குச் சொல்லலாம்னு இருந்தேன்... 'ராஜாவுக்குக் காது கழுதைக் காது'... என்ன....?

''... அப்பாவுக்குச் சொல்லு...''

அம்மா சிரித்தாள்.... ''... அப்பாதான் இல்லியேடா இங்கே... இருந்தா இப்படியா....'' ஒரு நொடியில் அவள் முகம் மாறியது... உடன் கண்கள் குளமாயின... சட்டென்று சமாளித்துக் கொண்டாள்...

''... நீ ஆண் பிள்ளை... சரி... ஒத்துக்கறேன்... ஆனா... நான் பெண் பிள்ளை இல்லியா...?... கேர்ள்... எனக்குத் துணை வேண்டாமா?... பயமா இருக்காதா?... ஓ.கே... நீ என் அறைக்கு வரவேண்டாம்... நான் இங்கேயே உன் பக்கத்திலே படுத்துண்டு தூங்கிடறேன்... கொஞ்சம் நகரு...

இவன் யோசித்தான்... போர்வையை உதறினான்... அரைமனதாக எழுந்தான்..

''...சரி... வா... போகலாம்....

அம்மாவை ஜெயித்து விட்ட மாதிரி இருந்தது... அதே சமயம் முழுவதுமாகத் தோற்றுப் போன மாதிரியும் தோன்றியது...

அம்மா கதை சொல்ல ஆரம்பித்தாள்...

... இவன் அவள் கழுத்தைக் கட்டிக் கொண்டான்.

... அப்புறம் அப்படியே தூங்கிப் போனான்!

---



ஒருவர்: தேர்தல்ல நீங்க நின்னு உங்க டெபாஸிட் போயிடும்.

அரசியல்வாதி: டெபாஸிட்தானே! போகுது விடு. நான் போனால் போதும்! ஜெயிச்சால் போதும்!

— ரா. தெ. மூர்த்தி.



காதலி: நமக்குக் கல்யாணம் ஆகிற மாதிரி ராத்திரி கனவு கண்டேன்!

காதலன்: சீக்கிரம் சொல்லு. எனக்குப் பொண்ணு யாரு? உனக்கு மாப்பிள்ளை யாரு?

— கடுவை. கோபால்சாமி.

# இலவசம்!

## ஒரு அரிய
# உருளும் கிலுகிலுப்பை



முந்துங்கள்! ஸ்டாக் ஓரளவே உள்ளது.

## ஸெரிலாக் பிரமோஷனல் டின் ஒவ்வொன்றுடனும்

**கொஞ்சமழகு வர்ணக் கிலுகிலுப்பையுடன் உங்கள் குழந்தை விளையாடுவதைக் கண்டு பரவசமடையுங்கள். இலேசாக தள்ளினால் — தரைமுழுதும் உருண்டோடும் இக் கிலுகிலுப்பை உங்கள் குழந்தையை குதூகலப் படுத்தும். ஒவ்வொரு ஸெரிலாக் பிரமோஷனல் டின்னுடன் இக் கிலுகிலுப்பை இலவசமாக கிடைக்கிறது.**

நான்கு மாதங்கள் ஆகும்பொழுது உங்கள் குழந்தைக்கு பாலுடன் கூடத் திட உணவும் தேவை. அவனுக்கு ஸெரிலாக்கின் அனுகூலங்களைப் புகட்ட இதுவே உகந்த வேளை.

போஷாக்கு அனுகூலம்:
ஒவ்வொரு தடவை ஸெரிலாக் ஊட்டும்பொழுதும் உங்கள் குழந்தைக்குத் தேவையான புரத சத்து, கார்போஹைட்ரேட், கொழுப்பு, வைட்டமின் மற்றும் தாதுப் பொருட்கள் ஆகிய எல்லா போஷாக்கு சத்துக்களும் அவனுக்கு கிடைக்கின்றன. அனைத்தும் குழந்தையின் விசேஷ தேவைக்கு ஏற்றபடி சரியான விகிதத்தில் தயாரிக்கப்பட்டுள்ளன.

சுவையில் அனுகூலம்:
ஸெரிலாக் நலம்தரும் போஷாக்குடன் நல்ல சுவையும் கொண்டது. ஸெரிலாக் சுவை என்றுமே குழந்தைகளுக்கு கொள்ளை ஆசை.

தயாரிப்பதில் அனுகூலம்:
ஸெரிலாக், குழந்தை உண்பதற்கேற்ப முன்கூட்டியே பதமாக்கப்பட்டுள்ளது. கொதிக்கவைத்து ஆறிய வெதுவெதுப்பான நீரில் கலந்தால் போதும், நொடியில் தயார் ஸெரிலாக் உணவு.

தேர்ந்தெடுக்க அனுகூலம்:
உங்கள் குழந்தை உணவை இன்னும் விரும்பி உண்ண இப்பொழுது ஸெரிலாக் இருவிதங்களில் வருகிறது. நான்கு மாதங்களிலிருந்து ஸெரிலாக் வீட், ஆறு மாதங்களிலிருந்து ஸெரிலாக் ஆப்பிள்.

*சுகாதாரமான முறையில் உணவு தயாரிக்கவும், உங்கள் குழந்தைக்கு சரியான விகிதத்தில் போஷாக்கு கிடைக்கவும் டின்னில் தரப்பட்டுள்ள குறிப்புகளை தயவுசெய்து பின்பற்றுங்கள்*







## உங்கள் குழந்தைக்கு அளியுங்கள் ஸெரிலாக் அனுகூலம்

# வேரில்லாத மரங்கள்

25

"ராஜா.... ஆ..."

"........"

"டே ராஜா ஆ.. எங்கேடா போயிட்டே?"

குரல் கொடுத்துக் கொண்டே உள்ளே வந்த பரிமளம் அவன் வராந்தாவில் ஒரு மூலையில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்து விட்டு அதட்டலாய்க் கேட்டார்:

"இங்கே தானே இருக்கே? கூப்பிட்டது காதுல விழலெ? ஏன்னு கேட்டா என்ன, குறைஞ்சு போயிடுவியா?"

ராஜா ஒரு தரம் சோர்வுடன் கண்ணை மூடித் திறந்தான்.

"என்ன?"

"என்னவா? ஸ்கூலுக்கு நேரம் ஆகலியா? பஸ் வந்திடப் போகுதேனு, டிபனைப் பண்ணி வச்சிட்டுக் கூப்பிட்டா, இங்க உக்கார்ந்து பராக்கு பார்த்துக்கிட்டு என்ன—னு மெதுவா கேக்கறியே!"

"எனக்கு டிபன் வேணாம் பாட்டி..."

"ஏன் வேணாம்?"

இப்போது பொறுமை இழந்து ராஜா கத்தினான்.

"வேணாம்னு விட்டுடுங்களேன்... என்னத்துக்காக நொண நொணனு நச்சரிக்கறீங்க?"

"மொளைச்சு ரெண்டு எலை விடல... அதுக்குள்ளார வாயைப் பாரு!... யார்தான் இப்படியெல்லாம் பேசக் கத்துக் குடுக்கறாங்களோ... ஏசுவே!... மொரண்டு பண்ணாம எழுந்து வந்து சாப்பிட்டுட்டுக் கிளம்பற வழியைப் பாரு, பஸ் வந்திடப் போகுது..."

தான் சொல்வதைக் காதில் வாங்காமல் பாட்டி பேசிக் கொண்டே போவதைக் கேட்கப் பிடிக்காதவன் போல் ராஜா எழுந்து புத்தகப் பையோடு படிகளில் இறங்கி வேகமாய் நடந்ததும், பரிமளத்தின் கோபம் அதிகமானது.

"டே.... நான் பாட்டுக்குக் கேட்டுக்கிட்டே இருக்கேன், நீ கம்முனு போனா என்ன அர்த்தம்? ம்? ராஜா... டே...."

அந்தக் கூப்பாட்டை லட்சியம் பண்ணாமல் ராஜா கேட்டைத் தாண்டித் தெருவில் நடந்ததும் அப்படியே சில நொடிகளுக்கு நின்று அவன் கண்களிலிருந்து மறையும் வரை வெறித்துவிட்டுப் பரிமளம் உள்ளே வந்தார்.

சமையல் கட்டில் தங்களுடைய மதிய

—சிவசங்கரி—

உணவை டப்பாக்களில் எடுத்து வைத்துக் கொண்டிருந்த மருமகளிடம் வந்து நின்று கொண்டார்.

"இந்த வீட்டுல நான் இருக்கிறதும் ஒண்ணுதான் இல்லாததும் ஒண்ணுதான். எல்லாருக்கும் நான்னா இளப்பம்..."

அவர் நீளமாய் அங்கலாய்க்கும் முன்னர் வசந்தா ஆயாசத்துடன் குறுக்கிட்டாள்.

"தயவு பண்ணிக் காலை வேளைல ஆரம்பிச்சுடாதீங்க அத்தம்மா... தலைக்கு மேல் வேலை கிடக்கு... இப்ப என்னத்துக்காகப் புலம்பறீங்க? யார் உங்களை என்ன சொன்னாங்க?"

"இன்னும் யாரு என்ன சொல்லப் பாக்கி இருக்கு! அதான் வேணது கேட்டாச்சே! எல்லாரும் கால்ல போட்டுத் தேய்ச்சு முடிச்சிட்டாங்க, இப்ப இந்தப் பொடியன் துவங்கி இருக்கான்.. டிபன் சாப்பிட்டுட்டுப் போடானு வாசலுக்குப் போய்க் கெஞ்சறேன்... காதுல வாங்காம அழும்பா நடந்து போறான்..."



"யாரு ராஜாவா? டிபன் சாப்பிடாமலா போயிட்டான்? காலைல எழுந்து ஏதாச்சும் நொறுக்குத் தீனி தின்னானா?"

"இன்னிக்கினு இல்ல, நாலைஞ்சு நாளாகவே இப்படித்தான்... ராத்திரி கூட ஒழுங்கா சாப்பிடறதில்ல... வயித்தைப் பிரட்டுது, தலையை வலிக்குதுனு ஏதேதோ நொண்டிக் காரணங்களைச் சொல்றான் வசு..."

வசந்தா கைக் காரியத்தை நிறுத்தி விட்டுப் புருவங்கள் முடிச்சுப் போட நிமிர்ந்தாள்.

"உடம்பு மெய்யாலுமே சரியில்லியோ என்னமோ!"

பரிமளம் கழுத்தை நொடித்து நையாண்டி



யாய்ச் சிரித்தார்.

''முதல்ல உன் மாமனாரை நினைச்சு நினைச்சுப் பேரன் கைல பணம் கொடுக்கறதை நிறுத்தச் சொல்லு... சாயங்காலம் 'வாக்' போறேன்னு போயிட்டு ரெண்டு பேருமா ஓட்டல்ல மூக்குப் பிடிக்கத் தின்னுட்டு வர்றதை நிறுத்தச் சொல்லு... பையன் தன்னால சரியாயிடுவான்.''

அத்தை சொன்னதை மனசில் வாங்கிய வசந்தா, மறக்காமல் ஐந்து நிமிஷங்களுக்கெல்லாம் மாதவன் டிபன் சாப்பிட உட்கார்ந்த போது அந்தப் பேச்சை எடுத்தாள்.

''ராஜா சரியாவே சாப்பிட மாட்டேன்றான்... உங்கப்பா அடிக்கடி அவனுக்குப் பணம் கொடுக்கிறதோட, ஹோட்டலுக்கும் அழைச்சிட்டுப் போயிடறதுல, வீட்டுச் சாப்பாடு அவனுக்கு ருசிக்கவே மாட்டேங்குது. வளர்ற பையன் கண்டதைத் தின்னு உடம்பைக் கெடுத்துக்கறது நல்லதுக்கு இல்ல... கொஞ்சம் சொல்லி வையுங்க...

பேசியவளை மாதவன் நிமிர்ந்து பார்த்தான்.

''அவரண்ட நான் சொல்றது இருக்கட்டும்; நீ நினைச்சு, நினைச்சு, ஐஸ்க்ரீம் சாப்பிடு ராஜா னு அஞ்சு, பத்து கொடுக்கிறதையும், உங்க அத்தம்மா இன்னிக்கு என்

ளோட நீ ஜபம் சொன்னா, உனக்கு ரெண்டு ரூபா தருவேன்னு லஞ்சம் தர்றதையும் கூடவே நிறுத்திட்டீங்கன்னா, பையன் மேல மெய்யாலுமே நீங்க அக்கறை உள்ளவங்கனு நா நினேச்சுப்பேன்''

''அப்ப, அப்ப? ராஜா மேல் எங்களுக்கு அக்கறை இல்ல, உங்களுக்கும், உங்கப்பா வுக்கும் தான் இருக்குனு சொல்றீங்க?''

மாதவன் கையை உதறிக் கொண்டு எழுந்து நின்றான்.

''நான் எதுவும் சொல்ல வரலே... ஆளே விடு..!'' என்றான்.

இது நடந்து நாலு நாட்கள் போல ஆன பிறகு, ஞாயிறு அன்று சர்ச்சுக்குப் போய் விட்டு வீடு திரும்பின பரிமளத்தின் கையில் பளபளவென்று ஒரு புது எவர்ஸில்வர் டப்பா.

கூடத்தில் அமர்ந்து புடைவை ஒன்றுக்கு ஓரம் மடித்துத் தைத்துக் கொண்டிருந்த வசந்தா அவரைக் கண்டதும் ''என்ன அத்தம்மா பாத்திரத்துல?'' என்றாள்.

பரிமளம் அவள் அருகில் வந்து டப்பாவைத் திறந்து காட்டினார்.

லேசான மஞ்சள் நிறத்தில் ஸ்பான்ஜ் மாதிரி ஒரு துண்டு..

''என்ன அத்தம்மா இது?''

பரிமளம் ஒருதரம் சிலுவைக் குறி இட்டுக் கொண்டார். பிறகு பக்தி நிறைந்த குரலில் ''ஆண்டவரோட மகிமைய நிரூபிக்கறதுக்காகத் தோன்றியிருக்கிற சப்பாத்தி வசு'' என்றார்.

''சப்பாத்தியா?''

''சாதாரணமானதுனு நினேச்சிடாதே வசு... பம்பாய்ல பாதிரியார் ஒருத்தர் மன முருகப் பிரார்த்தனே பண்ணினப்போ அவர் முதுகில இந்தச் சப்பாத்தி தானு வந்து ஒட்டிக்கிச்சாம். அதைப் பிச்சு எடுத்து, பீடத்துல தனி பாத்திரத்துல வச்சு, ஆண்டவரோட உத்தரவு படி ஜபம் சொன்னப்ப, மளமளன்னு வளர்ந்திட்டதை, எல்லாருக்கும் துளித் துளியா கொடுத்ததுல இன்னிக்கு நாடு பூரா பரவியிருக்கு தெரியுமா?... ஆண்டவரோட அற்புதங்கள்ல இதுவும் ஒண்ணு வசு...''

''இதை எதுக்காக வாங்கிட்டு வந்திருக்கீங்க அத்தம்மா?''

''எதுக்காகவா? ராஜா ஒரு வாரமா சரியாவே சாப்பிடமாட்டேங்கறான் இல்ல, அதுக்காகத்தான். அடைக்கலம் ஐயாகிட்ட 'பேரன் சோர்ந்து போய் இருக்கான்'னு சொல்லி வருத்தப்பட்டுக்கிட்டப்போ, 'ஏதாச்சும் செய்வினையா இருக்கும்; புனித சப்பாத்தி நீரைக் கொடுத்துப்பாரு, சரியாயிடும்'னு சொன்னாரு... ஜோஸப் கிட்ட சொல்லி, வாங்கிட்டு வரேன். தெனேக்கும் இதுல ஒரு ஸ்பூன் டிகாஷன ஊத்தி வச்சு, ஜபம் சொல்லி, அப்புறமா ராஜாவுக்கு அதைக் கொடுத்தா, பத்தே நாள்ல எந்தச் செய்வினையானாலும் கர்த்தரோட அருளால சரியாயிடுமாம்... பார்த்துக்கிட்டே இரேன்...''

உற்சாகத்தோடு பரிமளம் பேசியதைத் தன் அறை சாய்வு நாற்காலியில் அமர்ந்தபடி கேட்டுக் கொண்டிருந்த தணிகாசலம் புகைத்துத்தான் போனார்... 'ஏசுவின் அருள்' கொடி கட்டிப் பறப்பதைப் பார்த்துக் கொண்டிருந்தால் அப்புறம் 'முருகன் கிருபை' என்னவது?— என்கிற ரோஷம் எழ, சுட்டெரிக்கிற வெயிலே லட்சியம் பண்ணாமல் அன்று மதியமே வடபழனிக்குச் சென்று 'சகல வினே தீர்க்கும் முருக ஜோஸியரைச் சந்தித்தார்.

மாலே சுமார் ஏழு மணியளவில் வீடு திரும்பினவர் கையில் ஒரு காகிதப் பொட்டலம்.

''ராஜா, தம்பி ராஜா'' என்று அழைத்தவாறு உள்ளே வந்து, பரிமளம், வசந்தா, மாதவன் பார்த்துக் கொண்டிருக்கையிலேயே— படுத்திருந்த ராஜாவிடம் சென்றார். பொட்டலத்தைப் பிரித்து ''அப்பனே முருகா, புள்ளய எல்லா தீய சக்திலேந்தும் காப்பாத்துப்பா'' என்று உரக்க முனகி, அதிலிருந்த திருநீறை ராஜாவின் நெற்றியில் பூசினார்.

பின் கறுப்பு கயிறில் கோக்கப்பட்டிருந்த தாயத்தை ''கையை நீட்டுத் தம்பி'' என்று அவனே வலக்கையை நீட்ட வைத்து, புஜத்தில் கட்டினார்.

ஒரு நிமிஷம் நடப்பது எதுவும் புரியாமல் விழித்து விட்டு வசந்தா கணவனின் தோளே உலுக்கி, 'என்ன கூத்து இதெல்லாம், கேளுங்கள்' என்று ஜாடை காட்ட, மாதவன் ''என்னப்பா இது? தாயத்தா? எதுக்கு?'' என்றான் சின்ன குரலில்...

''எதுக்காக? வம்சம் தழைக்கப் பிறந்திருக்குற பேராண்டி, ஒண்ணே ஒண்ணு கண்ணே கண்ணுனு இருக்கிற கொழந்தை, நல்லா இருக்க வேணுமா, அதுக்காகத்தான்.. இந்தத் தாயத்தைக் கட்டிக்கிட்டா...''

ஒருவித உரிமையுடன் பேசிக் கொண்டு போனவரை வாயில் அழைப்பு மணி தடுத்தது.

தொடர்ந்து ''ஹலோ... ராஜா இருக்கானா?'' என்று வினவின மகாதேவனின் குரல்...

அது நாழிகை படுக்கையில் சோர்வுடன் படுத்திருந்த ராஜா மெள்ள எழுந்து வராந்தாவுக்குப் போக, அவனே மாதவன் பின் தொடர்ந்தான்.

கதவைத் திறந்ததும் மகாதேவன் அறைக்குள் வந்தார்.

''குட் ஈவினிங்... என்ன ராஜா உடம்பு சரியில்லேயா? என்ன? ரெண்டு மூணு நாளா வீட்டுப் பக்கமே வரலியே...''

. . . . . . . . .

''சாயங்காலம் தோட்டத்தில வாந்தி எடுத்தியாமே! முத்து சொன்னான்... போன வாரம் 'அடிக்கடி வாந்தி வருது அங்கிள்'னு சொன்னது இன்னுமா சரியாகல?'' பேசியவர் மாதவன் பக்கமாய்த் திரும்பிக் கேட்டார். ''டாக்டர்கிட்ட அழைச்சுக்கிட்டுப் போனீங்களா மிஸ்டர் மாதவன்...?''

சென்ற வாரமோ அல்லது இன்றோ மகன் வாந்தி எடுத்த விவரம் எதுவும் தெரி





யாததால் என்ன பதில் கூறுவது என்று புரியாமல் மாதவன் திருதிருத்தான். பிறகு, சமாளிக்கும் உத்தேசத்தோடு ''கன்னு, பின்னுனு வெளில சாப்பிட்டா அஜீரணம் வராம என்ன செய்யும்? பெரியவங்க சொல்ற பேச்சைக் கேட்டாத்தானே?'' என்றவன் ''உள்ளே வாங்க ஸார், இங்கேயே நின்னுகிட்டிருந்தா எப்படி?'' என்றான்.

மகாதேவன் புன்னகையுடன் தலை அசைத்து மறுத்தார்.

''மன்னிக்கவும் மிஸ்டர் மாதவன்... இப்பதான் வெளியிலேருந்து வந்தேன்... ராஜாவுக்கு உடம்பு சரியில்லே, வாந்தி எடுத்தான்னு முத்து சொன்னதால் பார்த்துட்டுப் போகலாம்னு வந்தேன். நாளைக் காலைல டெல்லிக்குப் போறேன். திரும்புனப்புறம் இன்னொரு நாள் சாவகாசமா வரேன். தாங்க்ஸ்''

பேசியவாறே ராஜாவை நெருங்கி அவன் தலை முடியில் விரல்களை விட்டுக் கோதி ''பெரியவங்க பேச்சைக் கேட்டுக்கிட்டுச் சமர்த்தா இருக்க வேணுமா ராஜா. அப்பா வருத்தப்பட்டுக்கறார் பாரு... ஆமா, இதென்ன கையில் புதுசா? தாயத்தா?'' என்று வினவ, ராஜா அப்பாவை ஒருதரம் அழுந்தப் பார்த்து விட்டுக் கேலியோடு பதில் கூறினான்.

''காலைல அந்தம்மா 'புனித சப்பாத்தி' கொண்டு வந்தப்புறம் தாத்தா சும்மா இருப்பாரா? பதிலுக்குத் தாயத்து கட்டியிருக்கார். நீங்க ஊர்லேயிருந்து வர்றதுக்குள்ள, இதுக்குப் போட்டியா பாட்டியும், அதுக்கு எதிர் போட்டியா தாத்தாவும் ஏதாச்சும் மேலமேல செஞ்சு, என்னை உண்டு இல்லேனு ஆக்கிடுவாங்க... நீங்க வேணா பாருங்க...''

கேலியும், சலிப்புமாய் அந்தச் சிறுவன் பேசுவது புரிய, மகாதேவன் நிமிர்ந்து மாதவனை ஏறிட்டார்.

தான் உணர்ந்ததை மாதவனும் புரிந்து கொண்டு அவஸ்தைப்படுகிற மாதிரி தோன்ற, அவசரமாய்ப் பேச்சை மாற்றினார்.

''அந்தப் பேச்சை விடு... உனக்கு டெல்லிலேருந்து என்ன வேணும் சொல்லு...''

ராஜா உதட்டைப் பிதுக்கி, தோளைக் குலுக்கினான். பின், நிற்க முடியாதது போல வராந்தா நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான்.

அவனிடம் விடை பெற்றுக் கொண்டு தம் வீட்டைப் பார்க்க நடந்த நிமிஷத்தில் ராஜாவிடம் காணப்பட்ட சோர்வு, இளைப்பு, ஆர்வமின்மை அவனுக்கு உண்மையிலேயே உடம்பு நன்றாக இல்லை என்பதை மகாதேவனுக்கு உணர்த்தியது.

மகாதேவனின் பயம் அடுத்த வாரம் அவர் திரும்பி வந்த போது நிஜமாயிருந்தது.

**கா**மாலை—

ஈரல் பாதிக்கப்பட்டு முற்றின மஞ்சள் காமாலை...



''பதவி போயிட்டுதே மேற்கொண்டு என்ன செய்யப் போறீங்க?''

''மேற்கொண்டு ஒன்றும் செய்ய முடியாது. கட்டிட வேலையையெல்லாம் நிறுத்திட வேண்டியதுதான்!''

— கடுவை. கோபால்சாமி.

இரண்டு வாரங்களாக வாந்தி, பசியின்மை, ஜுரம் என்று அவ்வப்போது தன் ரூபத்தை அது வெளியில் காட்ட முயன்றும், ஏனோ அந்த வீட்டிலிருந்த அனைவருக்குமே அது இன்ன வியாதி என்று புரிந்து கொள்ள முடியாமல் போனது பெரியவர்களின் தெரியாத்தனத்தாலா, அல்லது ராஜாவின் போறாத காலத்தாலா?... ஏதோ ஒன்று போங்கள்...

கடைசியாய்க் கண்களும், உடம்பும் மஞ்சள் தேய்த்துக் குளித்த தினுசில் நிறம் மாறிப் போய், 'எனக்கு உடம்ப என்னமோ பண்ணுது' என்று சுருண்டு ராஜா படுத்த பிறகே 'ஓஹோ! — செய்வினையும் இல்லே, மண்ணாங்கட்டியும் இல்லே — இது மஞ்சள் காமாலை' என்பது பெரியவர்களுக்கு விளங்கியது.

புரிந்த நிமிஷத்திலிருந்தாவது நிதானமாய் விவேகத்துடன் காரியத்தில் இறங்கினார்களா, என்றால் — அதுவும் இல்லை — உண்மை புரிபட்டதிலிருந்து இன்னொரு விதமாய் அந்த வீடு அமர்க்களப்பட ஆரம்பித்ததுதான் நிஜம்.

''முதல்ல அந்தச் சப்பாத்தித் தண்ணி குடுக்கறதை நிறுத்து'' — என்று தணிகாசலம் கத்த,

''அந்தத் தாயத்தைக் கழட்டி எறியச் சொல்லு'' — என்று பரிமளம் முறைக்க,

''அய்யரை அழைச்சிட்டு வரேன். ஊசியை மந்திரிச்சுத் தண்ணில போட்டார்னா தன்னால காய்ச்சல் குறைஞ்சிடும்'' என்று இவர் கூற,

''அதெல்லாம் ஒண்ணும் வேணாம்... மாதா கோவில்ல ஒருநாள் திருப்பலி பூசைக்கான செலவைத் தந்திடறேன்னு பிரார்த்திச்சுக்கிட்டா, தன்னால பையனுக்குச் சுகமாயிடும்'' என்று அவர் கூற,

மொத்தத்தில் அடுத்து வந்த நாட்கள் ராஜாவைப் பொறுத்தவரை வேதனையான நாட்கள்; தெரிந்தோ தெரியாமலோ அறிந்தோ அறியாமலோ, அந்த வீட்டுப் பெரியவர்கள் தங்களின் கண்ணைக் கட்டி விட்டக் குதிரைத் தனத்தால் அவனைப் பரிசோதனை எலியாக மாற்றிய நாட்கள்...

(முடிவு — அடுத்த வாரம்)

# மூடநம்பிக்கை

"பிடிவாதம் பண்ணுறீங்க, யோசிபுங்க... நான் சொல்லறேன்னு தப்பா நினைக்காதீங்க, என்ன் இருந்தாலும் கிரஹப்பிரவேசம்... உங்க கொள்கையைக் கொஞ்சம் மாத்திக்கக் கூடாதா?"

"இதப் பாரு கமலம், நான் சொன்னால் சொன்னதுதான். நாமநாளைக்குக்காலையிலே ஒன்பது மணிக்குப் புது வீட்டுக்குக் குடி போறோம். பத்து மணிக்கு நீ பால் காய்ச்சறே."



"ஏங்க நான் ஒண்ணும் உங்களை நல்ல நேரம் பார்க்கச் சொல்லலையே. பிடிவாதமா, சனிக்கிழமையா பார்த்து, ராகு காலத்திலேதான் போகணுமான்னு தான்..."

"ஆமா, ஆமா... இதைப் பாருடி. நான் ரோகிணியிலேதான் பொறந்தேன். என் மாமனுங்க எல்லாம் அமோகமா இருக்கானுங்க. நம்ம கல்யாணத்தைப் பந்தல் போட்டு ஜாம் ஜாம்னு மார்கழியிலேதான் நடத்தினேன்."

"ஆமாங்க, நான் இல்லேன்னு சொல்லலே. நீங்க நம்ம பெண்ணைக் கட்டிக் குடுத்தது கூடக் கார்த்திகை சஷ்டியிலேதான். அவளுக்கு வளைகாப்பு பண்ணினதும் எட்டாம் மாசம்தான். இருந்தாலும்... பல லட்ச ரூபாய் போட்டுப் பங்களா கட்டிப் பிள்ளைங்க, பேரன் பேத்திகளோட குடி போறோமேன்னுதான் மனசு அடிச்சுக் குது!"

"ஏண்டி, இதுவரையிலே இதுமாதிரி கெட்ட நேரமாப் பார்த்து எவ்வளவோ செஞ்சிருக்கேன். எதிலே தப்பு நடந்திருக்கு? செவ்வாய்க்கிழமை சதுர்த்தியிலேதான் கடையை ஆரம்பிச்சேன். அமோகமா முன்னுக்கு வரலையா? வீட்டுமனை கூட ஆனி மாசத்திலே வாங்கி அஷ்டமியிலேதான் அஸ்திவாரம்போட்டேன். கிடுகிடுன்னுகட்டி முடிக்கலே?"

"உண்மைதாங்க, ஆனா..."

"என்ன ஆனா, அவ்வளவு ஏன் போறே? அல்சருக்கு ஆபரேஷன் செய்துக்கிட்டேனே, எப்படி? நல்ல எமகண்டத்திலேதான் செய்யுக்குவேன்னு ஒத்தக் கால்லே நின்னு செய்யுக்கலே? என்ன ஆயிட்டேன்? இதைப் பாரு கமலம், நேரங்காலம் பார்க்கிறது எல்லாம் மூட நம்பிக்கை. நான் அதை உடைத்தெறிஞ்சிருக்கேன். பகுத்தறிவுவாதின்னு ஊர்லே எனக்கு எவ்வளவு நல்ல பேர் தெரியுமில்லே?"

"அதுக்காகச் செய்யற ஒவ்வொண்ணையும் தேடிப் பிடிச்சுக் கெட்ட நேரத்திலே தான் செய்யணுமா?"

"இதைப் பாருடி, எனக்கு அப்படித்தான் செய்யணும். அப்படிச் செய்தால்தான் எல்லாம் நல்லபடியா கைகூடுது. அதனாலே தான் பார்த்துப் பார்த்து அப்படிச் செய்யறேன். மூடநம்பிக்கைகளைப் பத்தியெல்லாம் எங்கிட்டே பேசாதே. ஆக வேண்டியதைப் பார்"

— கர்ஜித்துவிட்டு வெளியேறினார் கமலத்தின் கணவர்.

மூட நம்பிக்கை என்றால் என்னவென்று குழம்பினாள் கமலம்.

'கெட்ட நேரங்காலமாகவே பார்த்துச் செய்வது மட்டும் மூடநம்பிக்கை இல்லையோ?'

— கேட்க அவளுக்குப் பயம்!

புதுவை சந்திரஹரி

# எதிரொலியில் ராஜீவ் பதில்கள்!











ராஜீவ் காந்தி சென்ற முறை தமிழ்நாட்டுக்கு வந்த போது டிவியில் 'எதிரொலி' நிகழ்ச்சி பார்த்து அசந்து போய்விட்டாராம். மொழிபெயர்ப்பைக் கேட்டுத் தெரிந்து கொண்டதில், "அடடா! இப்படியெல்லாம் கூடப் பதில் கூற முடியும் என்று எனக்கு இதுவரை தெரியாமல் போய் விட்டதே" என்று வருந்தினாராம். இதன் பிறகு தூர்தர்ஷன்காரர்கள் சும்மா இருப்பார்களா? எதிரொலி நிகழ்ச்சியில் பதில் கூற உடனே ராஜீவுக்கு ஒரு வாய்ப்பு அளித்து விட்டார்கள்!

---

கடிதம் வாசிப்பவர்: 'இந்தியன் எக்ஸ்பிரஸ் ரெய்டு' நாடக நிகழ்ச்சியைப் பாராட்டி நிறையப் பேர் கடிதம் எழுதி இருக்காங்க...

ராஜீவ்: நேயர்களுக்கு ஒன்று சொல்லிக் கொள்கிறோம். இந்தியன் எக்ஸ்பிரஸ் மட்டுமில்லே வேறு சில பத்திரிகைகளையும் ரெய்டு பண்ற நாடகம் இடம் பெறலாம். நானூறுக்கும் மேற்பட்ட நடிகர்களை வைச்சு இந்த ரெய்டு நாடகத்தை எடுத்தோம். இவ்வளவு நடிகர்கள் தேவைதானான்னு சில பேர் கேக்கறாங்க. எப்பவும் ரெய்டு பண்றவங்க கூட்டம் ஜேஜேன்னு இருக்கணும். அப்பத்தான் நாடகத்துக்கு ஒரு தனி எஃபக்ட் இருக்கும்.

கடிதம் வாசிப்பவர்: 'இந்தியன் எக்ஸ்பிரஸ் ரெய்டு' நாடகம் முடிவில் 'சப்'பென்று ஆகிவிட்டது' ன்னு ஒருத்தர் எழுதி இருக்கார்.

ராஜீவ்: நாடகம் முடிவு வரைக்கும் விறுவிறுப்பா இருக்கணும்னு ஏன் எதிர்பார்க்கறீங்க? ஒரு மாறுதலுக்காகச் 'சப்'னு முடிவு அமைஞ்சிருக்கு. எல்லாத்தையும் ரசிக்கிற மனோபாவம் இருந்தா இது ஒரு குறையாத் தோணாது.

கடிதம் வாசிப்பவர்: போஃபோர்ஸாயணம் தொடரை எங்கள் குடும்பத்தில் அனைவரும் மிகவும் ரசித்துப் பார்க்கிறோம். முடிந்துவிடும் என்று பார்த்தால் நீண்டு கொண்டே போகிறது. தாமரை முகத்தானைச் சந்தேகித்து நாடே பேசும் போது அக்கினிப் பிரவேசம் செய்வதற்குப் பதில் நாடாளுமன்ற கமிட்டி என்கிற அரசவைக் குழு ஒரு டார்ச் லைட்டை அடிக்க அந்த டார்ச் வெளிச்சத்தின் வழியாக நடந்துவிட்டு 'இதுதான் அக்கினிப் பிரவேசம்' என்று தாமரை முகத்தான் வாதிடுவது சரிதானா?

ராஜீவ்: நேயர் ராமாயணத்தைப் பார்த்துவிட்டு போஃபோர்ஸாயணத்துடன் இணைத்துக் குழப்பிக் கொள்வது தவறு என்று சொல்லிக் கொள்கிறோம். அதுவுமில்லாமல் ராமர்—சீதை வாழ்ந்த காலத்தில் டார்ச் லைட்டுகள் கிடையாது. அதனால் சீதாப் பிராட்டி அக்கினி வழியாகச் சென்று அக்கினிப் பிரவேசம் செய்ய நேர்ந்தது. ஆனால் நாம் வாழுகின்ற காலத்தில் டார்ச் லைட்டுகள் இருக்கும் போது டார்ச் ஒளியின் மூலமாகத் தாமரை முகத்தான் செல்வதுதான் சிறப்பாக இருக்கும் என்று தெரிவித்துக் கொள்கிறோம். போஃபோர்ஸாயணம்



"உன் கணவர்தான் சூ.க. பண்ணிக்கிட்டாரே. அப்புறம் நீ எதுக்கு லேப்ராஸ்கோப்பி பண்ணிக்கணும்?"

"போடி இவளே! 160 ரூபாயும், கைத்தறி சேலை, ரவிக்கையும் ரண்டு தமிழ் நாடு லாட்டரிச் சீட்டும் சும்மா வருமா?"

— ஆல்பர்ட் ராஜ்.

தொடரைப் பாராட்டி நிறையக் கடிதங்கள் வந்திருக்கின்றன. அவற்றிலிருந்து சில கடிதங்களைப் பார்ப்போம்... எங்க, படிங்க...

கடிதம் வாசிப்பவர்: போஃபோர்ஸாயணம் தொடர் பலே பலே! தாமரை முகத்தான் எல்லாச் சோதனைகளிலிருந்தும் தப்பி விடுவார் என்று எதிர்பார்க்கிறேன்.

இன்னொரு கடிதம்: எதிரிகள் என்ன பழி சுமத்தினாலும் அலுங்காமல் நலுங்காமல் தாங்கிக் கொள்கிற தாமரை முகத்தான் நன்றாக நடித்திருக்கிறார்.

இன்னொரு கடிதம்: அமிதாப் — அஜிதாப் இரட்டையரின் பின்னணி இசை போஃபோர்ஸாயணத்திற்கு மெருகு சேர்க்கிறது. அடுத்து வரப்போகும் இந்திய—ஜெர்மன் கூட்டுத் தயாரிப்பான 'நீர்மூழ்கி பாரதம்' தொடரிலும் இவர்கள் பணி இருக்குமா?

ராஜீவ்: வேற நிகழ்ச்சியைப் பத்தின கடிதங்களைப் பார்க்கலாம்...

கடிதம் வாசிப்பவர்: ராஜ்ய சபாவில் மந்திரிகளும் காங்கிரஸ் உறுப்பினர்களும் உதவி ஜனாதிபதியைக் கண் கலங்க வைத்த நிகழ்ச்சி உருக்கமாக இருந்தது.

ராஜீவ்: நேயரின் பாராட்டிற்கு நன்றி. இது போன்ற நிகழ்ச்சிகளைத் தொடர்ந்து தயாரித்து வழங்க முயற்சி செய்வோம் என்று தெரிவித்துக் கொள்கிறோம்.

கடிதம் வாசிப்பவர்: பிரதம மந்திரியின் தண்டி யாத்திரையைப் பத்தி ஒரு நேயர் எழுதி இருக்கார்.

ராஜீவ்: படிங்க, படிங்க...

கடிதம் வாசிப்பவர்: மஹாத்மா காந்தி தண்டி யாத்திரையின்போது இருபத்தைந்து நாட்கள் நடந்து இருநூற்று நாப்பத்தியோரு மைல்கள் நடந்தார். அந்தத் தண்டி யாத்திரையின் நினைவாக, 'எட்டு மைல்கள் நடந்து காண்பித்தேன்' என்று பிரதமர் சொல்வது கேலிக்கூத்தாக இருக்கிறது.

ராஜீவ்: பிரதமர் எட்டு மைல்கள் நடந்த நிகழ்ச்சியைத் தொலைக்காட்சியில் எவ்வளவு நேரம் ஒளிபரப்பினோம் என்பது உங்களுக்குத் தெரியும். அவரும் மஹாத்மாவைப் பின்பற்றி இருபத்தைந்து நாட்கள் நடந்திருந்தால் அத்தனை நாட்களும் தொலைக்காட்சியில் வேறு நிகழ்ச்சிகள் காண்பிக்க வாய்ப்பிருக்காது. இப்படி இருபத்தைந்து நாட்கள் பூராவும் மற்ற நிகழ்ச்சிகளுக்கு நேரமில்லாமல் போய் விளம்பர வருவாயையும் இழந்து விடுவது எங்களுக்குச் சரியென்று படவில்லை. இதன் காரணமாகத்தான் பிரதமர் தமது நடையை எட்டு மைல்களோடு நிறுத்திக் கொண்டார் என்று தெரிவித்துக் கொள்கிறோம்.... சரி, நேரம் ஆகிவிட்டது. தொடர்ந்து எதிரொலிக்குக் கடிதம் எழுதுங்க... வணக்கம்...

— மாதவன்



* விக்டோரியா மகாராணி!

அளவுக்குத் தமிழகத் தொழில் துறை முன்னேறியிருக்கிறதா?

! 'தமிழக முன்னேற்றத் தொழில் மலர்' என்றுதான் குறிப்பிட்டிருக்கிறோமே யொழிய 'தொழில் முன்னேற்றச் சிறப்பு மலர்' என்று குறிப்பிடவில்லை. வளர்ச்சியை எடுத்துக் காட்டுவோம்; வளர வேண்டியதைச் சுட்டிக் காட்டுவோம்; வளராததற்குக் காரணங்களை அலசுவோம்.

# மூப்பனாரிடம் பேசமாட்டேன் என்கிறாரே ஜெயலலிதா...?

* வி. முரளி, சென்னை. 15.

? 'நடைபெற இருக்கும் தேர்தலில் நான் போட்டியிட மாட்டேன், எனக்குப் பதவி ஏதும் வேண்டாம்' என்று நெடுஞ்செழியன் கூறியிருப்பது பற்றி?

! பிரசவ வைராக்கியம்.

* மேஜர் தாசன், ஈரோடு.

? பெரியார் சிலைகளுக்குக் கீழே எழுதப் பட்டுள்ள வாசகங்களை நீக்க வேண்டு மென்று ஆளுனருக்குத் தந்தி கொடுக்குமாறு 'இதயம் பேசுகிறது' கேட்டுக் கொள்கிறதே?

! கடவுளை நம்புவதற்கு நமக்கு எவ்வளவு உரிமை உண்டோ, அத்தனை உரிமை கடவுளை நம்பாதிருக்க அவர்களுக்கும் உண்டு. இதை ராமாயணமே சொல்கிறது. ஆனால், 'கடவுளை நம்புவது முட்டாள் தனம்' என்று கூடக் கூறலாம்; 'கடவுளை நம்புகிறவன் முட்டாள்' என்று சொல்வது குற்றம்தான். இதைத்தான் இதயம் எதிர்க்கிறது.

* என். தினதயாளன், அயன்புரம்.

? 'ஜெயலலிதா முதல்வராகும் வரை நான் ஷேவ் செய்து கொள்ளப் போவதில்லை' என்று சௌந்தர் ராஜன் சபதம் எடுத்திருக்கிறாரே?

! சௌந்தர் ராஜனுக்குத் தாடி ரொம்ப எடுப்பாக இருக்கும் என்பதை வாக்காளர்கள் மறக்காமலிருப்பார்களாக!

* இரா. மு. குமார், திருவானைக்கோயில்.

? நீங்கள் சிறப்பு மலர் வெளியிடும்

* பி. ராஜசேகர், மதுரை — 14.

? ராஜீவ் நடத்திய தண்டி யாத்திரையில் பங்கு கொண்டவர்களுக்கு ரூ 40 தினப்படியாகக் கொடுக்கப்பட்டது பற்றி?

! தினப்படி கொடுக்கப்பட்டிருந்தால் அதில் ஒன்றும் அதிசயமில்லை; காலம் அப்படியாகி விட்டது. ஆனால் விலைவாசி இருக்கிற நிலையில் நாற்பது ரூபாய்க்கு ஆள் பிடிக்க முடிந்தது என்பதுதான் அதிசயம்!

* பி. வி. சீனிவாசன், சென்னை — 28.

? ஒரு பத்திரிகை ஆசிரியருக்கு என்ன

* தாடி சபதம்!





* மீண்டும் தேர்தலில்...?



* தூண்டில் போடுகிறார்!

* சின்னப் பையன் வர்ணனை



## நீங்கள் கேட்டவை — தராசு

என்ன 'மை'கள் இருக்க வேண்டும்?

! ஆண்மைக்குள் மற்ற எல்லா மைகளும் அடங்கும்.

* இடலை சுதா, குளத்தூர்.

? 'தமிழ் நாடு சட்ட சபையில் அமளி நடந்ததால் கவலைத்தேன் என்று கூறும் ராஜீவ், பார்லிமெண்டில் தினமும் அமளி நடக்கத்தானே, செய்கிறது — அதையும் கலைப்பது தானே?' என்று சபாநாயகர் பி. எச். பாண்டியன் கேட்கிறாரே?

! அங்கு நடந்தது அமளி; இங்கு நடந்தது துமி(லி)!

* ஜாம்பஜார் ஜெயபிரகாஷ், சென்னை

? தமிழ்நாடு இ. காங்கிரஸ் கட்சி நிலவரங்களைப் பற்றி வானொலியிலும் தொலைக்காட்சியிலும் கூறுவது எதைக் காட்டுகிறது?

! காங்கிரஸ் விரோதிகள் இந்த இரு நிலையங்களிலும் இருப்பதைத்தான்! தத்து பித்தென்று பேசுவதையெல்லாம் ஒலி—ஒளி பரப்பினால் காங்கிரஸின் ஏற்கெனவே சீரழிந்த இமேஜின் கதி என்ன ஆவது?

* நல்லான் இராமசாமி, குறிக்காரன்வலசு.

? சிதம்பரத்தை, 'சிவகங்கை சின்னப் பையன்' என்று நாஞ்சிலார் வர்ணிக்கிறாரே?

! இவர் இத்தனை வயதுக்கப்புறம் மந்திரக்கோல் மைனராக இருக்கும் போது அவர் சிவகங்கை சின்னப் பையனாக இருப்பதில் தவறில்லை.

* பி. தனபால், காரைக்கால்.

? கவர்னர் ஆட்சியின் சுறுசுறுப்புப் பற்றி?

! 3500 ஃபைல்கள் பேசுகின்றனவே!

* எல். ஆர். சுந்தரராஜன், சென்னை — 28.

? 'அலகாபாத் நாடாளுமன்றத் தொகுதி இடைத் தேர்தலில் அமிதாப் பச்சன் போட்டியிட்டால் டெபாஸிட் கூடக் கிடைக்காது' என்று வி. பி. சிங் கூறுகிறாரே?

! அதுதான் அரசியல் சாணக்கியம்! அமிதாப்புக்குத் தூண்டில் போடுகிறார் சிங். தாமே அலகாபாத்தில் நிற்கத் தயார் என்பது போலவும் பேசி வருகிறார். இப்போது அமிதாப் நிற்க மறுத்தால், 'அவர் மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டுக்கள் உண்மை; அதனால் துணிவின்றிப் பின்வாங்கி விட்டார்' என்று பேசலாம். அமிதாப் நின்று தோற்றால், 'மக்கள் அவருக்குப் பாடம் கற்பித்து விட்டனர்' என்று கூறலாம். அமிதாப் ஜெயித்து விட்டாலோ, 'அவரும் அவர் சகோதரரும் எத்தனை பெரிய குற்றவாளியானாலும் அவற்றுக்கும் மேலாகச் சினிமா மோகம் வேலை செய்கிறது' எனலாம். எப்படிப் பார்த்தாலும் சிங்குக்கு அமிதாப்பை இழுப்பதில் அரசியல் ஆதாயம் உள்ளது.

* குரு வைத்தியநாதன், கோவிந்தபுத்தூர்.

? 'மூப்பனாரிடம் பேசமாட்டேன்' என்று ஜெயலலிதா கூறி வருகிறாரே?

! ஆமாம், இவர் எப்பேர்பட்ட விக்டோரியா மகாராணி! உலக மகா தலைவி! இவர் போயும் போயும் மூப்பனாருடனா பேசுவார்? பேசினால் ராஜீவுடன்தான் பேச வேண்டும்! ஆனால் இந்த ராஜீவுக்கு எவ்வளவு திமிர் பாருங்கள்! ஒரு சமயம் தில்லிக்குச் சென்ற ஜெயலலிதாவைச் சந்திக்கவே நேரமில்லை என்று பார்க்காமலே திருப்பி அனுப்பி விட்டார். அதுதான் போகட்டும் என்றால் டெலிபோனில் இரவு பதினொரு மணிக்கு ஜெ கூப்பிட்டால் கூடப் பேச மாட்டேன் என்கிறார்! பிரதமரின் காரியதரிசியுடன் பேசுவதாம்! யார், ஜெயலலிதாவா அப்படி பேச முடியும்! சே! ஒரு தராதரம் வேண்டாம்? இன்று ஜெயலலிதாவையே இப்படி அவமதிக்கும் ராஜீவ், நாளை ரேகன், கோர்பசேவ் போன்ற பொடியர்களை எப்படித்தான் நடத்த மாட்டார்!

* ரூ. 15 பரிசு பெறுபவர்:

எஸ். ஜெயபிரகாஷ்,
80, பெருமாள் முதலி தெரு,
சென்னை — 600 014.

# பூவும் புயலும்

டீ கிரேட் சர்ஜனாக் இருந்த சிவ குமார், ஏன் டாக்டர் தொழிலை விட்டு விட்டு மெடிக்கல் காலேஜில் புரொபசராக மாறிவிட்டார் என்பது மாணவி(?) ராதிகா வின் சந்தேகம். அப்படி இப்படி ஆராய, டாக்டர் கல்யாணமானவர்; மனைவியாக வந்தவள் போதை மருந்து, ஹிப்பியிசம் இத்யாதிகளின் அடிமை; முதலிரவன்றே தள்ளாடி வந்து, புருஷன் மனத்தைக் காயப் படுத்தி வேறு யாருடனோ ஓடிப்போக, அந்த மனவருத்தத்தில் தப்பான சர்ஜரி செய்து ஓர் உயிர் பிரியக் காரணமாயிருந்தவர்; அதற்கு அப்புறம் கத்தி எடுப்பதேயில்லை என்று புரிகிறது. டாக்டரின் மேலான பணி களை மறுபடியும் ஊக்குவிக்க ராதிகா திட்டம் போட்டு, அவர் மனைவியாகவே வீட்டில் குடியேறி (சும்மா நடிப்புக்காம்), மயக்கிப் பாட்டுப்பாடி, ராம ராம!

வயசு மீறிவிட்டாலும் முகத்தின் துறு துறுப்பு ராதிகாவின் ப்ளஸ் பாயிண்ட். ஜோக்கிற்காக அவர் 'தமிழை'க் கொலை செய்யும் காட்சிகளில், மற்ற எல்லாம் வரு கிறது — சிரிப்பைத் தவிர. இவராவது பரவாயில்லை. செந்திலும், ஓமக்குச்சியும் வரும் ஸீன்களில் ஹாஸ்ய வறட்சி.

ராதிகாவை வேஸ்ட் செய்வது எப்படி என்று தீஸிஸ் எழுத நினைப்பவர்கள் அவசி யம் பார்க்க வேண்டிய படம். வேஸ்ட் லிஸ்டில் இன்னும் இரண்டு பேர்: மாதுரி, சரண்ராஜ்.

மீசை சிவகுமார் துறுதுறு. மீசையில்லாச் சிவகுமார் கடுகடு. பெரிய்ய டாக்டர் என் பதை நம்ப வைக்க இன்னும் அழுத்தமான காட்சிகளைச் சேர்த்திருக்கக் கூடாதோ? படுதாவுக்கு முன்னால் போட்ட நாடகம் போன்ற அமெச்சூர்த்தனத்தை இத்தனை படங்களுக்கு அப்புறமாவது சந்திரசேகர் தவிர்த்திருக்கலாம்.

லாஜிக் என்றால் லிட்டர் என்ன விலை என்று கேட்கும் சில காட்சிகள்:

1. தடாலென்று சிவகுமாரின் வீட்டில் கன்னிப் பெண் ராதிகா ராத்தங்க ஆரம்பிக் கிறாரே , அவருடைய அங்கிள், ஆண்ட்டி எல்லாம் கேள்வியே கேட்க மாட்டார்களா?

2. சரண்ராஜ் ஜெயிலுக்குப் போகிறார். வருகிறார். இடையில் தம் தங்கை பற்றி எதுவுமே தெரிந்து கொள்ள மாட்டாராமா?

3. போதை மருந்துக்கு அடிமையான மனைவி, மூக்கில் ரத்தத்தோடு திரும்பி வந்தவுடனேயே, 'என்ன, ஏது' என்று எந்த டெஸ்ட்டும் செய்யாமல் ஆப்பரேஷன் செய்ய வேண்டும் என்று சிவகுமார் படுக்க வைத்து விடுகிறாரே, என்ன ஆப்பரேஷன்?

4. அவ்வளாம் பெரிய ஆஸ்பத்திரியில் வெடிச் சத்தம் போடும் துப்பாக்கியால் சுட்டுக் கொண்டு சண்டை போடுகிறார் களே, யாருமே எட்டிப் பார்க்க மாட்டார் களா? உடம்பெல்லாம் தோட்டாவும் ரத்த முமாய் ஆப்பரேஷன் தியேட்டருக்குள் ளேயே நாசர் நுழைகிறார் என்றால் என்னங்க ஆசுபத்திரி அது?

க்ளைமாக்ஸ் போய்க் கொண்டேயிருக்கும் போது, 'பிலிம் தீர்ந்து விட்டது' என்று யாரோ குரல் கொடுத்தது போல, டபக் என்று படத்தை நிறுத்தி, 'மனைவி அமைவ தெல்லாம்' என்று கார்டு போடுகிறார்கள்.

நாறும், புழுக்கமும்!

— ஜெயமன்மதன்



தமிழ் நாட்டில் நாயன்மார்கள் ஆழ்வார்களால் பாடல் பெற்ற தோத்திரங்களுள் இரண்டு வேளை தீபமும், ஒரு வேளை நைவேத்யத் திற்கும் கஷ்டப்படுகிற கோவில்களுக்கு, வருகிற தமிழ் வருடப்பிறப்பிலிருந்து இரண்டு வேளை தீபத்திற்கும் ஒரு வேளை நைவேத்யத்திற்கும் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஏற்பாடு செய்ய இருக்கிறது. இதற்கு குறைந்த பக்ஷம் மாதம் ரூ 100/- (நூறு) ஆகும். இதற்காக சக்தி உள்ள குடும்பத்தினர்கள் மாதம் ரூ 100/- அனுப்பலாம். சக்தி குறைந்தவர்கள் தங்கள் சக்திக்கு ஏற்றவாறு உதவித் தொகை அளிக்கலாம். ரூ 10,000/- (பத்தாயிரம்) கொடுத்து இக்காரியத்திற்கு மூலதனமாக வைப்பவர்களுக்கு அவர் கள் ஆயுள் பர்யந்தம் அவர்களுடைய ஜன்ம நக்ஷத்திரத்தன்று விசேஷ பூஜை செய்து பிரசாதம் அனுப்பி வைக்கப்படும். ஸ்ரீ மடத்திலிருந்து ஸ்ரீ காமாக்ஷி அம்பாள் படமும், வெள்ளி டாலரும் அனுப்பி வைக்கப்படும். பணம் அனுப்ப வேண்டிய முகவரி :

**ஜன கல்யாண் டிரஸ்ட்**
**ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம்,**
**1, சாலைத்தெரு,**
**காஞ்சிபுரம் - 631 502**

விம்




இசை ஆராய்ச்சியில் ஈடுபாடு உள்ளவர்கள், 'ராமநாதனைக் கேட்போம், விளக்கம் தருவார்' என்பார்கள். சங்கீத ரசிகர்களோ, 'ராம நாதனின் பாட்டைக் கேட்கக் கொடுத்து வைத்திருக்க வேண்டும்' என்பார்கள். தமிழிசைப் பிரியர்கள், 'தமிழிசை வளர்ச்சிக்கும் ஆய்வுக்கும் ராமநாதனை விட ஆழமான தொண்டாற்றியவர்கள் யார்தான் இருக்கிறார்கள்? என்று அதிசயிப்பார்கள்! சங்கீதம் கற்றுக் கொள்பவர்கள், 'அடடா, ராமநாதனிடம் பாடம் கேட்பது போலாகுமோ?' என்று சிலாகிப்பார்கள். தேச பக்தர்களோ, 'பாரதியின் பாடல்களை அவர் எப்படிப் பாடினாரோ அதே மெட்டுக்களில் பாட மிகுந்த பிரயாசை எடுத்துக் கொண்டிருக்கும் ராமநாதன் எப்பேர்பட்ட தேசத் தொண்டு ஆற்றியிருக்கிறார்' என்று வியந்து போற்றுவார்கள்.

இவையெல்லாவற்றையும் விட முக்கியமாக, சங்கீதம் பற்றி ஒன்றுமே அறியாதவர்கள் கூட, 'ராமநாதனை, அவருடன் பேசிப்பழகுவதென்பது ஒரு பாக்கியமல்லவா!' என்று சொல்வார்கள்!.

அப்படிப்பட்ட மனிதர் எஸ். ராமநாதன்! அவர் முகத்தில் எப்போதும் ஒரு புன்னகை நிலவும். கண்களில் ஒளி மின்னும். மிருதுவாகப் பேசுவார். 'அகத்தின் அழகை முகத்தில் காணலாம்' என்பது யார் விஷயத்தில் மெய்யோ பொய்யோ, ராமநாதன் விஷயத்தில் நூற்றுக்கு நூறு சத்தியம்!

சத்தியத்தில் அவருக்கு ஆழ்ந்த நம்பிக்கை. 'உ.வே.சாமிநாத அய்யரைப் பார்த்தாயா? விளங் கவில்லை என்றால் விளங்கவில்லை என்று தயங் காமல் கூறி, பாட பேதங்களை அப்படியே கொடுத்திருக்கிறார் கவனித்தாயா?' என்பார். 'சத்தியம் தான் ஆராய்ச்சி; ஒருவர் அறிந்து கொண்டதை அப்படியே தருவதுதான் ஆராய்ச்சி' என்பார்.

ஆரம்பத்தில் அவரை 'வீணை ராமநாதன்' என்றுதான் பலரும் குறிப்பிடுவார்கள். அற்புதமாக வாசிப்பார், அண்ணாமலை பல்கலைகழகத்தின் இந்த சங்கீத பூஷணம். நாளாவட்டத்தில் இசைப் பேரறிஞர், சங்கீத கலாநிதி, கலைமாமணி, சங்கீத நாடக அகாடமி விருது முதலான பல பட்டங்கள் வந்தடைந்தன; பெருமையுற்றன.

சபேசய்யர், பொன்னையாபிள்ளை, டைகர் போன்ற மேதைகளைக் குருவாகப் பெற்றிருந்த ராமநாதன், அமெரிக்காவில் வெஸ்லியன் பல்கலைக் கழகத்தில் இசை போதித்ததோடு, ஆராய்ச்சிகளும் நடத்தி டாக்டர் பட்டம் பெற்றார். சென்னையிலும் மதுரையிலும் இசைக் கல்லூரிகளில் அரும் பணியாற்றினார்.

'தியாகையருடன் ஒரு நாள்' என்ற தலைப்பில் தியாகையரின் சிறப்புக்களை ஒரு இசை-வசன நிகழ்ச்சியாக வழங்கினார். நூறு தடவைகள் இந்த நிகழ்ச்சி அரங்கேறியுள்ளது.

சிலப்பதிகாரத்தில் அவர் நிகழ்த்தியுள்ள இசை நுணுக்க ஆராய்ச்சியும் விளக்கமும் அந்த காவியத்துக்கு இலக்கிய ரீதியான பெருமை தவிர, புதிய சிறப்புக்களையும் தேடித் தந்தன.

மும்மூர்த்திகளின் கிருதிகளை எவ்வளவு ஆழ்ந்த ஈடுபாட்டுடன் பாடுவாரோ அதே ஈடுபாட்டுடன் அவர்களுக்கு முற்பட்ட மும்மூர்த்திகளான முத்துத்தாண்டவர், கோபாலகிருஷ்ண பாரதி, மாரிமுத்தாப் பிள்ளை போன்றவர்களின் தமிழ்ப் பாடல்களையும் பாடுவார்.

பழந்தமிழ் இசை மும்மூர்த்திகளின் தேவாரப் பண்களை ஓதுவா மூர்த்திகளே வியக்கும் வண்ணம் இசைத்த விற்பன்னர் அவர்.

அவரது இறுதி மூச்சு பிரிவதற்கு முதல் நாள், தம் குமாரனிடம், ''எனக்கும் பகவானுக்கும் இடையில் இசை இருக்கு; ஊசி போடுவது எதற்கு?'' என்று கேட்டார். அவரே இயற்றிய சுருட்டி ராகப் பாடலைப் பாடச் சொல்லி விட்டு, ''பதநீத, மபதநீத'' என்று தாமும் சேர்ந்து பாடி, ''நிஷாதம் கேட்கிறதா?'' என்று வினவினார்.

ராமநாதன் நம்முடன் வாழ்ந்த போதும் சரி, நம்மை விட்டு அவர் பிரிந்த பின்னரும் சரி அவர் உயிர் மட் டும் இசையுடனேயே ஒன்றிக் கலந்திருந்தது: இன்றும் இசையுடன் இழைந்து உயிர் வாழ்கிறது.

அவருடைய பாரதி பாடல்கள் நூல், சுவரத் தாளக் குறிப்புகளுடன் தமிழக அரசால் அச்சிடப்பட்டு, எம்.ஜி.ஆரின் முன்னுரைக்காகக் காத்திருக்க நேர்ந்ததில் இன்னும் வெளியிடப் படாமல் இருக்கிறது. அதனை உடனடியாக 'பைண்டு' செய்து வெளியிடுவது அவருக்கு மட்டுமல்ல, மகாகவி பாரதிக்கும், இசை உலகுக்கும், ஏன் எம்.ஜி.ஆரின் நினைவுக்குமே கூடத் தமிழக அரசு செய்ய வேண்டிய கடமை.

— கி.ரா.




# தமிழக முன்னேற்றத் தொழில் மலர் 88

### சினிமா வீடியோ ஆடியோ

திரை உலகின் தலைவலிகள் பற்றி ஜி.வி.— பாரதிராஜா உரையாடல் தொடங்கி, வீடியோ, ஆடியோவில் ஏற்பட்டுள்ள முன்னேற்றங்கள் முதல் நடக்கின்ற தகிடுதத்தங்கள் வரை!

### அழகு சாதனங்கள் தயாரிப்பு

உலகப் பிரசித்தி பெற்ற பாண்ட்ஸ் (இந்தியா) நிறுவனத் தலைவர் நாராயணனுடன் ஒரு சூடான பேட்டி தொடங்கி பியூட்டி கிளினிக் நடத்தும் பெண்மணியின் கருத்துக்கள் வரை!

### வீட்டுச் சாதனங்கள்

தரத்துக்கு ஜனாதிபதியிடம் பாராட்டுப் பத்திரம் பெற்ற ஸ்டெய்ன்லஸ் ஸ்டீல் பாத்திரம் தயாரிக்கும் நிறுவனத்துக்கு நேரடி விசிட். மற்றும் தவணை முறையில் பல வீட்டுச் சாதனங்கள் வாங்குவது பற்றிய ருசிகரமான கலந்துரையாடல்.... இன்னும் பலப்பல.

### விளம்பரத் துறை

விளம்பரங்கள் அவசியம் தானா? அவற்றால் பொருள்களின் விலை உயர்வது தான் ஆதாயமா? விளம்பரமே வியாபாரமாகிப் பல கோடி முதலீடாகியுள்ள தொழில் துறையாக வளர்ந்துவிட்ட நிலையில் பல நெருடலான கேள்விகளுக்குக் கூட அந்தத் துறை சம்பந்தப்பட்ட முக்கிய புள்ளிகள் பதில் தருகிறார்கள்!

### இயற்கை வளம்; அடிப்படைத் தேவைகள்; நிதி திரட்டல், மனித முயற்சி மேம்பாடு

தேர்தல் நிதி அல்ல! தொழில் தொடங்க நிதி திரட்டுவது எப்படி? யார் யார் உதவுவர்? பெண் தொழிலதிபர்களை உருவாக்க வென்றே வகுப்புகள் நடத்தப்படுவது தெரியுமா? தமிழகத்தின் இயற்கை வளங்கள் திறம்படப் பயன்படுத்தப்படுகின்றனவா? தொழில் வளப் பெருக்கத்தின் அடிப்படைத் தேவைகள் என்ன?

### கதைகள், நாடகங்கள், நகைச்சுவை அம்சங்கள், துணுக்குகள், வண்ணப் படங்கள்

அசோகமித்திரனின் இருபத்தோராம் நூற்றாண்டு பற்றிய கதை நெஞ்சை உருக்கும்; எஸ். ராமனின் கிரைண்டர் நாடகம் சிரிப்பில் உடலை உருட்டும்! தொழில் துறைகள் தொடர்பான ரசமான துணுக்குகள்! நகைச்சுவை கார்ட்டூனிஸ்டுகள் கிளுகிளுக்க வைத்தால் புகைப்பட நிபுணர்கள் வண்ணப் படங்களால் பிரமிக்க வைக்கிறார்கள்!

### குரூப் நிறுவனங்கள்:

டி. வி. எஸ்., சக்தி, அமால்கமேஷன்ஸ் போன்ற சில குரூப் நிறுவனங்கள் புதிய புதிய தொழில்களை ஆரம்பித்து மளமளவென்று வளர்ந்து கொண்டே போவது எப்படி? வெற்றியின் ரகசியம் என்ன? சக்தி நிறுவனத் தலைவர் என். மகாலிங்கம் விரிவான பேட்டி.

### ஜவுளி

மில் தயாரிப்புக்கள் ஒரு பக்கம் சீந்து வாரின்றிக் குவிய, கைத்தறி நெசவாளர் மறுபக்கம் வறுமையில் தொடர்ந்து உழல, ஆடை ஏற்றுமதி வியாபாரத்திலோ எக்கச்சக்க சலுகைகள்; மூட்டை மூட்டையாகப் பணம்! முரண்பாடான இந்த நிலைமைகள் பற்றி விரிவாக...

### உணவுப் பொருட்கள்; பானங்கள்

ஊறுகாய் போடவும் அப்பளம் இடவும் இன்று யாருக்கு நேரம் இருக்கிறது? கணவன் மனைவி இருவரும் வேலைக்குப் போகும் இந்நாளில் சமையல் வேலைகளை எளிதாக்கித் தருகிறது பிரும்மாண்டமாக வளர்ந்துவிட்ட உணவுத் துறை. சேமியா தயாரிப்பு முதல் ஸ்பென்சர் சோடா வரை ஓர் அலசல்!

---

**260 பக்கங்கள் :: பல வண்ணப் படங்கள். விலை ரூ. 10/—. ரிஜிஸ்தர் தபாலில் பெற ரூ. 15/—.**

---

மார்ச் 31ல் எல்லா கல்கி ஏஜெண்டுகளிடமும் கிடைக்கும். உங்கள் பிரதிக்கு உடனே பதிவு செய்து கொள்ளவும்.

---

**மானேஜர், கல்கி, சென்னை— 600 032.**

# சுப்பத்தையின் சாபம்!

தங்கள் திருமண நாளின் வெள்ளி விழாவைக் கொண்டாட ராமன் முடிவெடுத்த கையோடு, அவர் மனைவி பார்வதம் மற்றொரு அவசர முடிவை எடுத்தாள்.

''வீட்டோட கொண்டாடினாப் போதும்; நம்ம பொண்ணு, பிள்ளை குடும்பங்கள், என் அக்கா, அண்ணு, உங்க தம்பி குடும்பங்கள் — இவுங்க போதும்; அனாவசியமா ஊர்ப்பட்ட உறவெல்லாம் இழுத்து விட்டுக்க வேணும்'' —

''ஆமாம்! அதுவும் அந்தச் சுப்பத்தைப் பட்டாளத்தைக் கூப்பிடவே கூடாது!''— காலேஜ் பிக்னிக்குக்கென்று கோவா கிளம்பிக் கொண்டிருந்த மகன் ரமேஷும் மகள் ராஜியும் கோரஸ் பாடினர்.

''ரொம்ப இன்டீஸெண்ட்; எப்பவும் பெரிய பட்டாளத்தோட வந்து, ஒரு வாரம் காம்ப் போட்டுக் கழுத்தறுக்கும் கிழம்.'' ரமேஷ் முணுமுணுத்தான்.

'நம்ம சுரேஷ் கல்யாணத்துக்குப் பத்துப் பேரை அழைச்சுண்டு வந்து, பத்து வேளை சாப்பிட்டுட்டுப் பத்து ரூபா ப்ரெசண்ட் பண்ணினா; சுலோ கல்யாணத்துக்குப் பன்னிரண்டு பேர். சம்பந்தி க்ரூப்பே கிளம்பிட்டுது! இந்தச் சுப்பத்தை அண்ட் கோ கிளம்பலே! அப்பவும் அதே பத்து ரூபா தான் கவர்ல!'' பார்வதம் தொடித்தாள்.

''இல்லேம்மா; அப்ப க்ரேட் கொஞ்சம் உசந்துட்டுது! பதினொரு ரூபாய் பிரசன்டேஷன்'' — நமுட்டுச் சிரிப்புடன் ராஜி திருத்தினாள். ''ஆனால் வசூல் ஐம்பத்து நாலு ரூபாய்; ஒரு ப்ளவுஸ் பீஸ் ப்ளஸ் அஞ்சு எவர்சில்வர் பேஸின்'' —

''பிரசன்டேஷன்ல என்ன இருக்கு? ஏதோ அவளால் முடிஞ்சது...'' ராமன் சன்னமான குரலில் சுப்பத்தைக்காக வாதாடிப் பார்த்தார்.

இந்த நிலையில், சுப்பத்தையைப் பற்றிச் சின்ன அறிமுகம் — தேர்தல் சமயத்தில் சுப்பத்தை வீட்டை முற்றுகையிடாத அரசியல் கட்சியே இருக்காது! அது ஒரு ''ஓட்டு வங்கி''! சிறு வயதில் தாயை இழந்த ராமனைத் தந்தை வழியில் ஒன்றுவிட்ட சகோதரியான 'சுப்பத்தை' எனப்படும் சுப்புலக்ஷ்மி அம்மாள் தான் சில காலம் வளர்த்தாள். அதன் பிறகு வசதியான தாய் மாமன் பராமரிப்பில் ராமன் படிப்படியாக வளர்ந்து, பெரிய நிறுவனத்தின் அதிபதியாக, பணக்காரப் பார்வதத்தின் கணவனாக, இரண்டு பெண் இரண்டு பையன்களின் தகப்பனாக உயர்ந்து விட்டார். ஆனாலும், ராமன் வீட்டில் தண்ணீர் தெளித்தால் கூட, பழைய கதையைச் சொல்லிக் கொண்டு சுப்பத்தை ஆஜராகி விடுவாள். அதுவும் ஏதோ தேர்தலுக்கு ஓட்டுப் போடப் போவது போல், பிள்ளைகள், நாட்டுப் பெண்கள், பெண்கள், பேரன்கள் பேத்திகள் என்று பெரிய கூட்டத்தைத் திரட்டிக் கொண்டு வருவாள்!

பார்வதத்தின் உறவுக்காரர்கள் எல்லாம் நாசூக்காக முகூர்த்த வேளைக்கு வந்து, நூற்றி ஒன்று, ஐநூற்றி ஒன்று எனப் பரிசளித்து விட்டு விடை பெறுவதும், ராமனின் உறவினளான சுப்பத்தை ஐந்தும் பத்தும் பரிசளித்து விட்டு அட்டை போல் ஒட்டிக் கொண்டிருப்பதும் பார்வதத்துக்குப் பரிகாசமாகவும் தொல்லையாகவுமிருந்தது. ''ஏதோ பாவம்! அந்தக் காலத்து மனுஷி'' என்று ராமன்தான் சமாதானம் செய்வார்.

இப்போதுதான் சில மாதங்களாக, நங்கநல்லூரைத் தாண்டி, சின்னதாக வீட்டைக் கட்டிக் கொண்டு சுப்பத்தை குடும்பம் குடி பெயர்ந்ததால், இவர்களுக்குத் தொந்தரவு குறைந்தது.

''இருந்தாலும் உள்ளூரில் இருந்து கொண்டு அழைக்காமல் இருந்தால் நன்றாயிருக்காது''— பலவீனமாக ராமன் இழுத்த போது, ''பேசாம ரெண்டு நாள் முன்னாடி ஒரு கார்டு போடுங்க போதும்! போஸ்டல் டிலேன்னு சொல்லிக்கலாம்'' என்று முற்றுப்புள்ளி வைத்தாள் பார்வதம்.

வெள்ளி விழாவுக்கு இரண்டு நாட்களிருக்கையில், பெரிய பிள்ளை சுரேஷிடமிருந்து தந்தி வந்தது: திடீரென்று இன்ஸ்பெக்ஷன் வந்துவிட்டதாலும், குழந்தைக்கு தாளம்மை போட்டிருப்பதாலும் வரமுடியவில்லை என்று! ஆனால் நிகழ்ச்சியை வீடியோ எடுக்கச் சொல்லியும், அதற்கான செலவைத் தானே ஏற்பதாகவும் தொடர்ந்து வந்த கடிதம் தெரிவித்தது. பார்வதத்துக்கு ஏக வருத்தம்!

மறுநாள் மாலை மாயவரத்திலிருந்து பெண் சுலோ குடும்பமும், பிக்னிக் சென்றிருந்த ரமேஷும் ராஜியும் வருவதாயிருந்தது.

ஆனால் காலையில் வந்த செய்தி அனைவரையும் அதிர்ச்சிக்குள்ளாக்கியது.

ஆளும் கட்சியின் முக்கிய தலைவர் இயற்கை எய்தி விட்டார் என்று செய்தித்தாள்கள் கறுப்புப் பட்டையிட்டுத் துக்கம் கொண்டாடின!

டீ.வியும் ரேடியோவும் கூட அழ ஆரம்பித்து விட்டன. போதாக் குறைக்குக் கல



வரங்கள், கடையடைப்பு, சமூக விரோதிகளின் வெறியாட்டம், எல்லாமாகச் சேர்ந்து கொண்டு போக்குவரத்தையே ஸ்தம்பிக்கச் செய்து விட்டன.

**வி**டிந்தால் வெள்ளி விழா! வெளியூரில் மாட்டிக் கொண்ட பிள்ளை பெண்களிலிருந்து, அடுத்த ஸ்டேஷனிலிருக்கும் பார்வதத்தின் சித்தி வரை எல்லோரும் போக்குவரத்தையும் கலவரத்தையும் காரணம் காட்டி, ஃபோனிலேயே வாழ்த்துக்களைச் சொல்லி விட்டனர். ட்ரங்காலில் ராஜி அழுதே விட்டாள்! ''அந்தச் சுப்பத்தையோட சாபமாயிருக்கும்'' என்று கொசுறாக ஒரு காரணத்தை வேறு சிருஷ்டித்தாள்.

பார்வதத்தின் மனசு குமுறியது! என்ன கொண்டாட்டமிது? ஒருவருமில்லாமல் 'ஹோ'வென்று வெறிச்சோடிப் போய்... ஒரு சமயம்... சுப்பத்தையின் சாபம் தானோ... சட்! எல்லாவற்றையும் கான்சல் செய்துவிட்டு, 'ஓ' என்று கத்தி அழ வேண்டும் போல் வெறி பிடித்தது!

ராமனுக்கும் அதே நிலைதான்! வாசற்கதவை அறைந்து சாத்தப் போனவருக்கு... அதிர்ச்சி... ''ஏண்டாப்பா? நான் வர்றது தெரியலையா?'' என்று குரல் கொடுத்துக் கொண்டே வந்தாள் சுப்பத்தை!

''நன்னா கார்டு போட்டே போ! சித்த முந்தி போட்டிருக்கக் கூடாதோ? மணியார்டர் ஃபாரம் வாங்க நேத்திக்கு அவர் போஸ்டாபீஸ் போனாரா? எதேச்சையா உன் கார்டைப் பார்த்திருக்கார்! இல்லாட்டா இந்தக் கலாட்டாவுல அடுத்த வாரம்தான் எனக்குக் கார்டு கெடச்சிருக்கும்''... சுப்பத்தை பேசப் பேசப் பார்வதத்துக்கு வியர்த்துக் கொட்டியது! வரவேண்டியவர்களெல்லாம் வராமல் போக, யார் வர வேண்டாமென்று மனசு வக்கிரமாக நினைத்ததோ, அவள் மட்டும் நேரில் முழுசாக நிற்கிறாளே!

''இந்தக் கலாட்டாவில் ஒரு சைக்கிள் கூட ஓடல! நீ எப்படி நங்கநல்லூர்லேந்து தி. நகர் வரைக்கும் வந்தே?'' ராமனுக்கு வியப்பு!

''அதுவா? நம்ம பக்கத்து வீட்டுப் பையன் ஏதோ ரசிக மன்றத் தலைவனாம்! பெரிய லாரியில் தொண்டர்களை எல்லாம் ஏத்திக் கொண்டு வந்தான்; என்னையும் சித்த ஏத்திக்கோப்பான்னேன். 'நீயும் தலைவருக்கு அஞ்சலி செலுத்த வர்றியானு' அழைச்சுண்டு வந்துட்டான். எல்லாரையும் கூட்டிண்டு வரணும்னுதான்! லாரியில் இடமில்லை. ஒரே கசங்கி, நெருக்கிண்டு, முண்டியடிச்சு எப்படியோ சமாளிச்சுட்டேன்; மனசு கேக்கறதாப்பா? நம்ம வீட்டுக் கொழந்தைக்கு ஒரு நல்லதுன்னா வராமல் இருக்க முடியறதா?''

மூச்சிரைக்கப் பேசிக் கொண்டே ஒரு தட்டில் வெற்றிலை, பாக்கு, பழம், பூ நடுவே ஒரு பத்து ரூபாய் நோட்டைச் சுப்பத்தை எடுத்து வைத்தபோது, பார்வதத்துக்குப் பத்து கோடியாய் அது பளிச்சிட்டது.

''ஏதோ... என்னாலானது'' என்று சுப்பத்தை தட்டை நீட்டினாள்.

''இத்தனை கஷ்டத்துலயும், மெனக்கெட்டு, ஆசையா ஓடி வந்திருக்கியே! அதைவிட வேறு என்ன பரிசு வேணும்?'' – கண்களில் நீர் பனிக்க ராமன் தம்பதியர் அவள் கால்களில் விழுந்தபோது, வெள்ளி விழாவை வெகு விமரிசையாகக் கொண்டாடிய நிறைவு இருவர் மனத்திலும் பூத்தது.

**ஜெயஸ்ரீராஜ்**

எல்லோரும்... ..எல்லோரும்... ..எல்லோரும்...








எல்லோருமே
விரும்புவது
நியூட்ரின்
**ட்விங்க்**




- ஆரஞ்சு
- லெமன்
- மேங்கோ
- பைனாப்பிள்
- கிரேப்

**ட்விங்க்**
ஸாஃப்ட் டிரிங்க் கான்ஸன்ட்ரேட்




சுவைகளும் புதுமை, சுவைத்திட இனிமை

ACIL/090/87-Tam




• திவாரி

# திவாரி செய்த விசமம்

ஒரு குடும்பத்தின் பொருளாதாரத்தை நிர்வகிப்பதற்கும் நாட்டின் நிதி நிர்வாகத்தைக் கட்டுப்படுத்துவதற்கும் இடையில் அதிக வேற்றுமையில்லை. அடிப்படையில் பார்த்தால் யதார்த்த அறிவுடன் செயல்படுகிறவன் குடும்பத்தைச் சரியாக நிர்வகிப்பான்; அசட்டுத்தனமாக அளவுக்கு மீறிக் கடன் வாங்குகிறவன் கடைசியில் திண்டாடித் தவிப்பான். அரசாங்கத்தின் விஷயமும் இப்படித்தான். ஒரே ஒரு வித்தியாசம். தனி மனிதன் கெட்டுப் போனால் அது அவனை மட்டுமே பாதிக்கும்; அரசு பொருளாதாரத் தவறுகளைச் செய்தால் அது நாடு முழுவதையும், அதன் மக்கள் அனைவரையும் பாதிக்கும்.

குடும்ப பட்ஜெட்டில் இரண்டு அம்சங்கள் உண்டு. முதலாவது மாதாந்திரச் செலவு. இரண்டாவது, மூலதனச் செலவு—அதாவது, ஒரு வீடு அல்லது கார் அல்லது டீவி என்று பெரிதாக ஓர் அம்சத்தை வாங்கத் திட்டமிடுவது. புத்திசாலியான குடும்பஸ்தன், மாதாந்திரச் செலவை முடிந்த மட்டில் கட்டுப்படுத்தி மூலதனச் செலவுக்காகச் சேமிப்பான். அல்லது, வீடோ, காரோ வாங்கி விட்டுத் தவணை முறையில் கடனை அடைப்பான். மாதாந்திரச் செலவை இதற்காகக் கட்டுப்படுத்தா விட்டால் அவனால் தவணைகளைச் செலுத்த முடியாது. மேலும் மேலும் கடன் வாங்கி மூழ்கிப் போவான்.

அரசாங்கத்தின் பட்ஜெட்டிலும் இதே போல் இரு அம்சங்கள் உண்டு. வருவாய்க் கணக்கு (Revenue) என்பது ஒன்று. இந்தக் கணக்கில் வரவு என்ற தலைப்பில் பல்வேறு விதமான வரிகள், வட்டிகள், லாபப் பங்கீடுகள், முதலியன அரசுக்குக் கிடைக்கிறது. செலவு என்ற தலைப்பில், அரசாங்க ஊழியர்களுக்குச் சம்பளம், ராணுவச் செலவு, சமுதாயப் பணிகளுக்கான செலவு, மான்யங்கள், வாங்கிய கடனுக்குத் தரப்படும் வட்டி முதலியன அடங்கும். இவையெல்லாம் மூலதனச் செலவுகள் அல்ல. இவற்றை, 'திட்டத்துக்கு அப்பாற்பட்ட செலவினங்கள்' என்று குறிப்பிடுவார்கள்.

அரசு பட்ஜெட்டில் இரண்டாவது அம்சம், மூலதனக் கணக்கு (capital account). இந்தக் கணக்கில் வரவு என்ற தலைப்பில், அரசு மக்களிடம் வாங்கிய கடன்கள்; சேமிப்புப் பத்திரங்கள் மூலம் கிடைத்த தொகைகள்; பிராவிடெண்ட் ஃபண்ட் தொகைகள்; மாநில அரசுகள் திருப்பிக் கொடுத்த கடன்கள்; அயல் நாட்டு அரசாங்கங்கள் தந்துள்ள கடன்கள் முதலியன அடங்கும், இந்தத் தொகைகளை மூலதனமாக்கி, லாபகரமான தொழில்களை நடத்தி, அந்த லாபத்திலிருந்து கடன்களைத் திருப்பித் தருவதுடன் புதிய தொழில்கள் தொடங்கவும் அந்த லாபம் பயனாக வேண்டும். தொழில் உற்பத்தி அதிகரிக்க அடிப்படைத் தேவைகளான மின் உற்பத்தி, பெட்ரோலியம் எண்ணெய், நிலக்கரி, பாசன வசதி முதலியவற்றில் இத்தொகைகளை முதலீடு செய்யலாம்.

இப்போது திவாரி சமர்ப்பித்துள்ள நடப்பு ஆண்டு பட்ஜெட்டுக்கு வருவோம். இவர் கணக்குப்படி, வருவாய்க் கணக்கில் துண்டு விழும் பற்றாக்குறை 9,842 கோடி. மூலதனக் கணக்கில் அதிகப்படியாக உள்ள தொகை 2,358 கோடி. திவாரி சாமர்த்தியமாக என்ன செய்திருக்கிறார் என்றால், 9,842 கோடியிலிருந்து 2,358 கோடியைக் கழித்து நிகர பற்றாக்குறை 7,484 கோடி மட்டுமே என்று கணக்குக் காண்பித்திருக்கிறார். எப்படி இருக்கிறதென்றால், மாதாந்



அடுத்த இதழில்...

## பரீட்சை எனும் பயங்கர அனுபவம்

— கவர் ஸ்டோரி

திரச் செலவுகளைக் கட்டுப்படுத்தத் தெரியாத குடும்பஸ்தன் ஒருவன், வீடு வாங்கச் சேமிக்கிற தொகையிலிருந்து பணத்தை எடுத்து மாதாந்திரச் செலவுகளுக்குப் பயன்படுத்துவது போலத்தான்! இவனுக்கு வீட்டுக்கான கடனை அடைக்கப் பணம் எங்கே இருக்கும்? மேன்மேலும் கடன் பட்டுத்தானே போவான்? இதே நிலைமை தான் நாட்டுக்கும் ஏற்படும் என்பதை, யார் யாரெல்லாம் அரசுக்கு எடுத்துரைத்து எச்சரிக்கை செய்திருக்கிறார்கள் தெரியுமா?

சி. சுப்பிரமணியம், பால்கிவாலா, திட்டக் கமிஷன் உறுப்பினர் ஆர். ஜே. செல்லய்யா போன்ற பல பொருளாதார மேதைகள். "இந்த ஆபத்து பற்றிப் பிரதமருக்குத் தெரியுமா? அவருக்கு விவரம் தெரிவிக்கப்பட்டுள்ளதா?" என்ற கவலையை சி. எஸ். வெளியிட்டிருக்கிறார்.

இது மட்டுமல்ல; பட்ஜெட்டுக்கு முன்பாக ஒவ்வொரு ஆண்டும் ரிஸர்வ் வங்கி, நாட்டின் பொருளாதார நிலைமை பற்றி ஓர் அறிக்கை சமர்ப்பிக்கும். இந்த ஆண்டு அந்த அறிக்கையில் ரிஸர்வ் வங்கியும் எச்சரித்திருக்கிறது: 'பொருளாதார ரீதியில் லாபம் தராத இனங்களில் அரசு செலவுகள் செய்வதைக் கணிசமாகக் குறைக்க வேண்டும்; மான்யங்களைக் குறைக்க வேண்டும்' என்றெல்லாம் பல சிபாரிசுகளைச் செய்துள்ளது. ஆனால் இதையெல்லாம் நிதி அமைச்சரோ, பிரதமரோ லட்சியம் பண்ணுவதாகவே தோன்றவில்லை.

உடனடியாக விழித்துக் கொள்ளாவிட்டால், 1990 முதல் 2000 வரையிலான பத்து ஆண்டுகளில் பாரதம் ஒரு பயங்கரமான பொருளாதார நெருக்கடியைச் சந்திக்க நேரும்.

—வி. கோபாலன்

# வட்ட மேஜை

## எச்சரிக்கை: தளபதி திடமதிக்குப் போட்டி!

• தலையங்கம் படித்தேன். அட! நம்ம ஆஸ்தான ஜோக்கர் தளபதி திடமதியையும் மிஞ்சுகிற ஜோக்கர்கள் இருக்கிறார்களா? தூள் கிளப்பி வந்த திடமதியின் இடத்தைப் பிடித்து விடுவார்கள் போலிருக்கிறது! தலையங்கமும் தரமாக பதில்களும் மற்ற ஜோக்குகளை எல்லாம் ஓரங்கட்டி விட்டன!

வடுவூர் — எஸ். கண்ணன்.

• தலையங்கம் பிரமாதம். இன்றைய பாரதத்தின் நிலையைத் தெளிவாய் எடுத்துக் காட்டுவது. ஆனால் இப்படிப்பட்ட ஜோக்கர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்பி வைத்த பொது மக்கள்தான் உண்மையான ஜோக்கர்கள். ஓட்டுரிமையை ஜோக்காக எடுக்காது சீரியஸாக எடுத்துக் கொள்ள வேண்டிய தருணம் வந்து விட்டது என்று பொதுமக்களுக்கு அறிவுறுத்தியதற்காக நன்றி.

நல்ல சோபாரா, (மஹாராஷ்டிரா) — புரட்சி செல்வன்.

• "நாட்டின் வளம் பெருக நாம் என்ன செய்ய?" வேண்டும் என்பதை மிக அழகாக விளக்கமாக வி. கோபாலன் எடுத்துக் கூறியதால் பயன் பெற்றேம். பிரயோசனமான ஒன்று கல்கியின் ஒரு பக்கத்தை ஆக்கிரமித்தது குறித்து ஆனந்தம்தான். இத்தனை நாளாகப் பங்கு மார்க்கெட்; யூனிட்டிரஸ்ட் லாபம் பற்றியெல்லாம் தெரிந்திராத எனக்கு, மிகவும் உதவியாக இருந்தது அக்கட்டுரை.

திருவாரூர், — ஏ. என் சுந்தரேசன்.

• கல்கியின் தூண்டுகோலினால் அளிக்கநேந்தல் கிராமத்திற்குச் சாலை வசதி கிடைத்து அவ்வூர் மக்கள் பயன்பெறுவது மகிழ்ச்சியை ஏற்படுத்துகிறது. முடங்கிக் கிடக்கும் ஒவ்வொரு மாவட்டத்தின் குறைகளையும் கல்கி மேலும் சுட்டிக் காட்டிப் பொதுமக்களுக்கு நல்வழி காட்டிட வேண்டும்.

திருநெல்லிக்காவல், — எஸ். அரிஅரன்.

• தற்காலத் தொழிற்சங்க முறைகேடுகளை 'எக்ஸ்ரே' படம் பிடித்தது போல் எழுதப்பட்ட 'கொடி பிடிப்பது கொள்கைக்கல்ல' சிறுகதை நெஞ்சை விட்டு நீங்கவே இல்லை!

திருத்துறைப்பூண்டி, — ஜெ.... பிஸ்மி.

• பெற்றவர்களுக்கும், பிள்ளைகளுக்கும் பிளவு ஏற்படும் போது, இருவரையும் இணைத்து வைக்கும் பாசப் பாலமாகப் பேரன் திகழ்வதை எத்தனையோ கதைகளில் படித்திருந்தாலும், மிக மென்மையாக விளக்கியது சுகவர் சுந்தர் எழுதிய 'ஒரு பட்டுக் கயிறு போல்...' என்ற சிந்தி மொழிச் சிறுகதை. மொழி பெயர்த்த சரஸ்வதி ராம்னாத்துக்குப் பாராட்டுக்கள்.

விருதுநகர், — எம். எஸ். கல்பனா.

• 'பார்கவி' கதை கைடு கூறிய சாடு என்றாலும் நல்ல ரசனைத் தன்மையோடு கூறப்பட்ட இனிய காதல் கதை. அதற்குப் பத்து ரூபாய் என்ன, நூறே கொடுக்கலாம்.

கொடைக்கானல், — வி. சக்திவேல்.

• பந்தா இல்லாமல், வார்த்தை ஜாலங்கள் இல்லாமல், நடந்த தவறுகளுக்கு மன்னிப்புக் கேட்கும் பாணியில், அடக்கமாகவும், யதார்த்தமாகவும் அமைந்த ஜானகியின் பேட்டி மனத்தைக் கவர்ந்தது.

விருதுநகர், — கே. டி. ஆர். சேகர்.

• புரட்சித் தலைவரின் கட்சியும் ஆட்சியும் உடையாமலிருக்க அரசியலுக்கு வந்திருக்கிறேன் என்பதும், நம்ப வைத்து ஏமாற்றிய காரணத்தினாலேதான் தி.மு.க. உதவியை நாடினேன் என்ற உண்மையும், அனைவருமே இங்கு வர வேண்டும் என்ற உளம் நெகிழ்ந்த வார்த்தைகளும் ஜானகி எம்.ஜி.ஆர்.ஐ ஒரு தேர்ந்த அரசியல்வாதியாகக் காட்டி விட்டன. பதில்கள் பொறுமையின் சிகரத்தை எட்டி விட்டன.

மேட்டூர் அணை, — கோபி தமிழரசு.

• அவர் (எம்.ஜி.ஆர்.) வளர்த்த கட்சி சிதறக் கூடாது என்பதற்காகத்தான் நான் அரசியலுக்கு வந்தேன். அந்த அம்மாளும் (ஜெயலலிதா) வந்து ஒன்றாக இணைவதையே விரும்புகிறேன் என்ற பதில் மூலம் ஜானகி அம்மாள் ஜெயலலிதாவை விட ஆயிரம் மடங்கு உயர்ந்து விட்டார். என்ன இருந்தாலும் ஆயிரத்தில் ஒருத்தனது துணைவி அல்லவா அவர்!

திருவனந்தபுரம், — எஸ். எஸ். மணி.

• 20.3.88 இதழில் ராமநாதபுரத்துக்கு எஸ். டி. டி. இணைப்புப் பெற, மைக்ரோவேவ் டவர் அமைக்க, நில ஆர்ஜிதம் செய்து தரப்பட்டு விட்டதாக கலெக்டர் கூறியுள்ளார். அவ்வாறு நிலம் இன்னும் தரப்படவில்லை என்றும் வழக்கு இன்னமும் சென்னை உயர்நீதி மன்றத்தில்தான் இருக்கிறது என்றும் தெரிவித்துக் கொள்கிறேன்.

சென்னை — 17. — எஸ். எஸ். ஐயர். டைரக்டர், மைக்ரோவேவ் திட்டம்.

• கேள்வி — பதில் பகுதியில் "சிகரெட் விலை ஏற்றம்" பற்றிய கேள்விக்கான தங்கள் பதில் எங்களைப் போன்ற சிறு வியாபாரிகள் மனம் புண்படும்படியாக உள்ளது. வருடா வருடம் பிப்ரவரி 15 தேதிக்கு மேல் மொத்த விற்பனையாளர்களிடம் சுத்தமாக சிகரெட் கிடைக்காது. எனவே நாங்கள் அருகிலுள்ள வேறு ஊர்களுக்குச் சென்று அங்கே உள்ள மொத்த விற்பனையாளர் கொடுக்கின்ற விலைக்கு வாங்கி வந்து விற்பனை செய்வோம். இது கம்பெனி நிர்ணயித்துள்ள விலையையும் விட மிக அதிகம். உதாரணமாக சிசர்ஸ் ஆயிரம் ரூ.206 கம்பெனி ரேட் என்றால் நாங்கள்—பெட்டிக்கடைக்காரர்கள்—ரூ 260க்கு வாங்கிறோம். இப்படியேதான் எல்லா பிராண்ட் சிகரெட்டும். இவ்வளவு விலை அதிகம் கொடுத்து நாங்கள் வாங்கி வந்து குறைந்த விலைக்கு எப்படி விற்க முடியும்? மொத்த விற்பனையாளர்கள் அடிக்கும் லாபத்தை நாங்கள் எப்படி தடுப்பது?

சீர்காழி, — ஜெம் சிராஜுதீன்.



# நித்திய கண்டத்தைச் சந்திக்கும் எஸ்.பி. சவான்

அண்மையில் மகாராஷ்டிர மாநில முதல்வரின் படத்துடன் முழுப்பக்க விளம்பரங்கள் பம்பாய் நாளிதழ்களில் மட்டுமின்றித் தமிழ் நாட்டில் தினத்தந்தி உள்படப் பல நாளிதழ்களில் வெளி வந்தது பல புருவங்களை உயர்த்தியிருக்கும்.

எஸ். பி. சவான் முதலமைச்சர் பதவி ஏற்று இரண்டு வருஷங்கள் பூர்த்தியாகி விட்டன. இந்தக் காலகட்டத்தில் என்ன சாதித்தார் என்பதை விளக்கின அந்த விளம்பரங்கள். சாதனைகள் ஒரு பக்கமிருக்க, இப்படி விளம்பரப்படுத்தி தமது புகழ் பரப்பிப் பதவியைத் தக்க வைத்துக் கொள்ள முயற்சி செய்ய வேண்டிய நிர்ப்பந்தத்தில் இருக்கிறார் சவான்.

மகாராஷ்டிரத்துக்கும் கர்நாடகத்துக்கும் இடையே பல வருடங்களாகத் தீராமலிருக்கும் எல்லைத் தகராறுக்கு மகாராஷ்டிர எதிர்க் கட்சிகள் புத்துயிர் அளித்து முதலமைச்சர் எஸ். பி. சவானுக்குத் தலைவலி ஏற்படுத்திக் கொண்டு இருக்கின்றன.

மார்ச் 15ம் தேதி தொடங்கிய சட்டமன்ற பட்ஜெட் கூட்டத் தொடரில் முதல் தினம் கவர்னர் பிரம்மானந்த ரெட்டி ஆற்றிய உரை பலருக்கும் கேட்காதபடி எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் ஆர்ப்பாட்டம் செய்தனர். அதற்குப் பிறகு நாலைந்து நாட்களுக்குக் கூட்டங்கள், கூச்சல்கள், கோஷங்கள், கண்டனங்கள் முதலியவை தொடர்ந்தன.

மகாராஷ்டிரா ஏகீகரன் சமிதி என்ற இயக்கம், பட்ஜெட் கூட்டத் தொடர் முடியும் ஏப்ரல் 22 தேதி வரை எல்லைப் போராட்டத்தைத் தொடர முடிவு செய்துள்ளது. அதே போல் சிவசேனா கட்சியின் இரண்டு எம். எல். ஏ.க்களும் மற்றும் எம். எல். ஸி.க்களும் சட்ட சபையில் அரசாங்கத்துக்குப் பலத்த எதிர்ப்பு தெரிவிக்கத் தீர்மானித்திருக்கின்றனர்.

முதலமைச்சர் சவானைப் பலவீனப்படுத்தும் நோக்கத்துடன்தான் எல்லைப் பிரச்னையை மீண்டும் கிளறிப் புத்துயிர் அளிக்கிறார்கள் என்பது பலரது கருத்து. பாவம், சவான். மந்திரி சபையை விஸ்தரிக்கத் தில்லியில் மேலிடத்து உத்தரவு எவ்வளவோ முயன்றும் கிடைக்க மாட்டேன் என்கிறது. வசந்த் தாதா பாட்டீல், சரத் பவார், ராமராவ் அதிக் முதலிய காங்கிரஸ் கட்சித் தலைவர்களே, கூட இருந்து குழி பறிக்கப் பார்க்கிறார்கள். சவானை முதலமைச்சர் பதவியிலிருந்து இறக்கத் தீவிரமாக முயற்சி செய்கிறார்கள்.

இந்த அவதிகள் போதாவென்று சவான் அமைச்சரவையிலிருந்து இரண்டு மூன்று மந்திரிகளை நீக்க வேண்டும் என்ற கோரிக்கை வேறு! பாலசந்திர (பாய்) சாவந்த் ஏற்கெனவே அமைச்சர் பதவியை இராஜினாமா செய்து விட்டார். பம்பாய் உயர்நீதி மன்றத்து நீதிபதி லென்டின் தமது கமிஷன் அறிக்கையில் 1984—1985 வருடங்களில் பாய் சாவந்த் தமது மந்திரி பதவியைத் துஷ்பிரயோகம் செய்தார் என்று கூறி இருக்கிறார்.

மார்ச் 30ம் தேதி சவானுக்குச் சோதனை நாள். அன்றுதான் லென்டின் கமிஷன் அறிக்கையை (கல்கி 17.1.88 இதழ் பக்கம் 19—20) சட்டசபையில் வெளியிட அரசாங்கம் ஒப்புக் கொண்டு இருக்கிறது. அதைத் தொடர்ந்து என்னென்ன நாடகங்கள் நடக்குமோ!

இத்தகைய ஒரு நிச்சயமற்ற சூழ்நிலை நிலவிய போதிலும் அண்மையில் நடந்த தேசிய அபிவிருத்திக் கௌன்சில் கூட்டத்தில் கலந்து கொண்ட எஸ். பி. சவான், சேமிப்புப் பத்திரங்கள், பிராவிடண்ட் ஃபண்ட் நிதி போன்றவற்றில் கூட மத்திய அரசு சில புதிய கொள்கைகளை வகுத்ததன் மூலம் மாநில அரசுக்கு வருவாய் வற்றிப் போகும்படி செய்து விட்டிருப்பதைக் கடுமையாகச் சாடியிருக்கிறார். இப்படி பிரதமரை எதிரே வைத்துக் கொண்டு பேசியதே பெரிய வீர சாகசமாகக் கருதப்படுகிறது!

—ஜி. சந்திரசேகர்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157: ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 6.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 340/—; விமானத் தபால் ரூ. 680/—.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 160/—; விமானத் தபால் ரூ. 340/—.

பாசமுடன் படைக்குது பாண்ட்ஸ்

# POND'S




உங்கள் பாப்பாவுக்கு—பாண்ட்ஸ் பாசப் பெருக்கு
ஒப்பில்லா உருவம் எடுத்து விளையாட வந்திருக்கு:
கொஞ்சமழகு பொம்மைக் கரடி வடிவிலே
பாண்ட்ஸ் ஸ்பெஷல் பேபி பவுடர், ஸ்பெஷல்
பேபி சோப். இதயத்துப் பாச மலர்கள் இரண்டு:
பாண்ட்ஸ் கருத்த் தரம் உரைக்கும்
படைப்புகள்—அத்தனையும் தூய்மை, முத்தான
முழுமை. உங்கள் குஞ்சுப் பாப்பாவின்
மழலைக்கு மழலை பேசி 'பிஞ்சுடலிலே
கொஞ்சி விளையாடும் மென்மை
நாளெல்லாம்—முத்தமாரி பொழியத்
திகட்டாத பூமென்மை. பூரணமாய்
நம்புவீர்: பூப்போல மேனி தழுவி
உங்கள் பாப்பாவைக்
காப்பது பாண்ட்ஸ்.

பாசத்தால் அரவணைப்பீர் உங்கள் பாப்பாவை

POND'S

பாண்ட்ஸ் ஸ்பெஷல் பேபி பவுடர் மற்றும் சோப்

